உ

சிவமயம்.

# தில்லைக்
# கற்பகவிநாயகர் சதகம்.

---

# தில்லைக்
# கற்பகவிநாயகர்
## தோத்திரம் எழுபது.

---

இவை

தேவிகோட்டையின்கண்

தி—வகை

வெ. ஆ. தி. மா.

**சிதம்பரச்செட்டியாரால்**

இயற்றப்பெற்று,

சென்னை:

ஆநந்தா அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

ஈசுவர ஸ்ரீ மிதுநரவி.

1937.

சிவமயம்.

# சிறப்புப் பாயிரம்.

சிதம்பரம் பச்சையப்பா ஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீலஸ்ரீ

வை. தருமலிங்கம் பிள்ளையவர்கள்

இயற்றியது.

## கட்டளைக் கலித்துறை.

தங்கச் சபையொளிர் தில்லைச் சிவாலயந் தங்கியமா
தங்கச் சுமுகக் கடவுட்குத் தேவைச் சநபதத்துத்
தங்கச் சிதம்பர நாம வசியன் சதகம்புனி
தங்கச் சமிலன் புறத்தோத் திரத்தொடுஞ் சாற்றினனே.

சங்கத் திருக்க மலையுறை தில்லைத் தலக்கற்பகச்
சங்கத் திருக்க விநாயகன் காதை சதகத்தின்பாற்
சங்கத் திருக்கவி கற்றோர் கொளப்பாற் சலதிவந்த
சங்கத் திருக்குந் தாளம் பொருவச் சமைந்தனவே. உ.

---

க. மாதங்கம்-யானை; சநபதம்-நகரம்; கச்சம்-அளவு.

உ. சங்கத்திரு-சுகத்தைத் தருகின்ற கருத்தா; இவை வட மொழி; "திருவாசுகி யென்று திளைத்திடு கத்திரு" எனத் திருவெற்றியூர்ப் புராணத்தில் வருமாறு, கர்த்ரு என்பது கத்திருவெனவந்தது. சங்கத் திருக்க விநாயகன்-நெற்றிக்கண்ணை யுடைய விநாயகப்பெருமான்; சங்கம்-நெற்றி; திருக்கு-கண்; சலதி-கடல்; சங்கம்-சபை; சங்கம்-சங்கு; தாளம்-முத்து.

# நூற்பயன்.



ஆத்தி யதிக மடைவ ரறமின் பரோகதிட
காத்திர மார்வர் கணேச பிரான்றிருக் கண்ணருட்குப்
பாத்திர மாவர் சதகக் கலித்துறைப் பாவொளிரித்
தோத்திர நூலினைப் பாரா யணஞ்செயுந் தூயவரே.

---

ஆத்தி-பொருள்; ஆஸ்தி என்னும் வடமொழி ஆத்தியென வந்தது; அறம் இன்பு-அறமும் இன்பமும்; அடைவரென்பதை இவ்விரண்டோடுங் கூட்டுக; "வடுவிலா வைய்த்து மன்னிய மூன்றன்-நடுவண தெய்த விருதலையு மெய்தும்" என்ற நாலடியார்ச் செய்யுட்படி பொருளானது, தான் அறத்தையு மின்பத்தையும் வளர்த்து முப்பாலுட்டாய்ப்பாலாய் நிற்றல்பற்றி ஈண்டு முற்கூறப்பெற்றது.

# அறிவிப்பு.

— ❀ —

1. சதகம் என்பதற்கு, நூறு என்பது பொருள்; அது, எண்ணலளவையாகு பெயராய் நூறு செய்யுளை யுடைய நூலுக்காயிற்று.

2. இந்தக் கற்பக விநாயகர் சதகமானது! தொண்டை மண்டல சதகமும், கோகுல சதகமும், கோவிந்த சதகமும் கட்டளைக்கலித்துறைப் பாவாலமைக்கப் பெற்று இற்றைக்கும் ஆன்றோராட்சியிலிருந்து வருதல்பற்றிக் கட்டளைக் கலித்துறையால் அமைக்கப்பெற்றது.

3. இச்சதகம், விநாயக புராண சரித்திரங்களைப்பெரும் பாலும் கிரமமாகச் செய்யுளிடந்தந்ததற்கேற்ற மட்டின் மிகச் சுருக்கியமைத்துச் செய்யப் பெற்றது.

4. இச்சதகத்திற் சில செய்யுட்களுக்கு உரையும், அரும்பதப் பொருளும், மேற்கோளும், விஷய விவரணமும் ஒவ்வொரு பக்கங்களிலும் அடிப் பாகத்தில் அவ்வச் செய்யுளிலக்கத்தையிட்டு வரையப்பெற்றுள்ளன.

5. இச்சதகச் செய்யுள் வசனங்களில் காலதேச வர்த்த மானம் நோக்கி வழக்கச் சொற்களும் ஏக தேசத்தில் உபயோகிக்கப்பெற்றிருக்கும்.

இங்ஙனம்,

வே. ஆ. தி. மா.

சிதம்பரச் செட்டியார்,

தேவிகோட்டை.

## தோத்திர மெழுபதைப்பற்றிய

### தனிக் கலித்துறை.

கோட்டியிற்பாட்டெண்ணைமட்டுமெண்போதொட்டக்கூத்தர்
[செய்நூல்
ஈட்டி யெழுபதுங் கம்பர்செய் நூலே ரெழுபதும்போற்
றேட்டிபாசம்வேய்சுமுகர்க்குயான்செயித்தோத்திர நூல்
பாட்டிலெழுபதான்முற்றிற்றென்றெண்ணுவர்பாவலரே.

---

கோட்டி-சபை; கோஷ்டி என்னும் வடமொழி இவ்வாறு வந்தது; இதனை "அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய-நூலின்றிக் கோட்டி கொளல்" எனத் திருக்குறளிலும் "புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி" என நாலடியாரிலும் வருமாற்றாலறிக. பாட்டெண்-செய்யுளி னெண்ணிக்கை; எண்போது-நினைக்கும்பொழுது; தோட்டி-அங்குசமென்னும் ஆயுதம்; இதனை "சாணங் கணிச்சி யங்குசந் தோட்டி கோண மென்றுங் கூறப்படுமே" என்ற பிங்கலந்தைச் சூத்திரத்தாலறிக. வேய்தல்-தரித்தல்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தில்லைக் கற்பக விநாயகர்

# சதகம்.

---

## காப்பு.

### கட்டளைக் கலித்துறை.

பொற்பொதுவாய்ந்தபுலியூர்க்குடக்கோபுரத்தினில்வாழ்
கற்பக நாம விநாயக னற்சத கந்தழைப்ப
அற்புத மாயவன் றன்னடித் தாமரைக் கன்பொடுமின்
சொற்பொரு டந்தடி யேற்குமுன் னின்று துணைசெயுமே.

## நூல்.

### கட்டளைக் கலித்துறை.

உலகெலாங் கோயி லெனும்பொதுச் சொல்லா னுரைக்
திலகமாந் தில்லைச் சிவாலய மேலைச் சிகரியமர்ங் [குந்தலத்
திலகமூ வாயிரம் வேதியர் பூசைகொ ளேரம்பனே
அலகிலா நந்தா வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. க.

---

காப்பு—பொற்பொது—கநகசபை; புலியூர் — சிதம்பரம்; குடக்கோபுரம்—மேலைக்கோபுரம்.

க. உலகெலாம் என்பது பெரிய புராணம் பாடும்பொருட்டுச் சேக்கிழார்சுவாமிகட்கு ஸ்ரீமங் நடராஜப்பெருமான் அடியெடுத்துக்கொடுத்த மங்கள த்திருவாக்கு. பொதுச்சொல்லாவது, அழகர்கோயில், ஆண்டான்கோயில், நயினர்கோயில், நாகர் கோயில், வயித்தீசுவரன் கோயில், அம்பர்ப்பெருந்திருக்கோயில், திருக்கண்ணார் கோயில், காளையார் கோயில், குழகர்கோயில், நன்னிலத்துப் பெருங்கோயில், மீயச்சூரிளங்கோயில், வைகன் மாடக்கோயில், சுந்தரப்பெருமாள் கோயில், உப்பிலியப்பன்

சபாபதி யேநீ யுனேச்சங்க ராத்மச னென்பதனாற்
சுபாசுப கன்மத் துனேயாருஞ் சுக்லாம் பரதரவென்
றுபாசித் துபக்கிர மித்தவை முற்றலா துன்பெருமை
அபார மபார மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. உ.

---

கோயிலென உலகிலுள்ள ஒவ்வொரு தலப்பெயரையுங் கூறும் போது எல்லாவற்றோடு மியைக்துரிற்குர் தகுதியையுடைய கோயில் என்னும் பொதுச்சொல்லாம்; உலகத்திற் காரணேசுரர் பலரிருக்க ஈசுவரநாமம் தொடர்மொழியின்றித் தனித்துச் சிவபெருமானொருவனுக்கே செல்லுமாறுபோலவும், பருப்பதம் பலவிருக்க அந்த நாமம் தொடர்மொழியின்றி ஸ்ரீசைல மொன்றற்கே செல்லுமாறு போலவும், கோயில் பலவிருக்க, அப்பெயர் தொடர் மொழியின்றி இத்தில்லேத்தல மொன்றற்கே செல்லுதலாற் றில்லேத்தலத்தைத் தலத்திலகமெனக் கூறியதென்றறிக; ஈசநாமம் சிவனுக்கும், பருப்பதநாமம் ஸ்ரீசைலத்துக்கும் உரித்தாதலே "பொருப்பிறை மகளுனெற்குப் பொருந்துரு தீச நாமம்-நெருப் பனே யான்சார்ந் தாங்கு நிகழ்தொடர் மொழியினன்றிப்-பருப்பத மெனவே கூறப் படுமிது" எனவரும் பிரபுலிங்கலீலேச் செய்யுளா லறிவதோடு கேள்வியாலும் அறியலாம். சிவாலயம் என்றும் தில்லேக் கனகசபைக்கு ஒரு பெயருண்டு; உண்டென்பதை "சித்தம் பாமுத் திபரப் பிரமந்திகழுஞ்சபை சத்தி சிவாலயமே" என வரும் கோயிற்புராணச் செய்யுளாலறிக. மேலேச்சிகரி-மேலேக் கோபுரம்; ஏரம்பன் என்பது-விநாய சோடசநாமத்து ளொன்று. அலகு இல் ஆநந்தம் - எண்குணத்து ளொன்ருகிய வாம்பிலின்ப முடைமை.

உ. உனேச் சங்கராத்மஜன் என்பதனாற் சபாபதியே நீ- உன்னேச் சங்கரனுகிய பரமாத்மாவே பிள்ளேயாய் அவதரிக்கப் போந்தவனென்று சாத்திரங் கூறுதலாற் சபாநாயகப் பெருமானே நீயாவை என்க. பரமசிவனே தன்னின் வேருகாத

மேனை மகள்சிவ காமி மகிழ விழிக்குணவாம்
தேனை நிகர நடேச னடஞ்செய் சிதம்பரத்தில்
வானை யளாம்பச் சிமகோ புரத்தில் வதிந்தருளும்
ஆனை முகாநீ யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௩.

---

பிள்ளைத் திருமேனிகொண்டு கற்பக விநாயகப் பெயர்பூண்டும் விளங்குகின்ரு னென்பதை "என்னின் வேறுமா காமலென் பிள்ளையா யிருக்கும் நின்னை" என விநாயக புராணம் கணபதி திருவவதாரப் படலம் 40-ற் கணபதியபிமுக சிவப்புரோக்த வாக்கியமாகக் கூறப்படுதலாலும் "தனக்குத்தானேமக னாகிய தத்துவன்-தனக்குத்தா னேயொரு தாவருங் குருவுமாய்த்-தனக்குத்தா னேயருட்டத்துவங் கேட்டலும்-தனக்குத்தா னிகரினன் றழுங்கி நின் ருடினன்" எனத் தணிகைப் புராணம் வீராட்டகாசப் படலம் 118-ற் கூறப்படுதலாலும் அறிக; இஃதொருவாறிருக்க, சீவாத்துமாக்களிலுங்கூட, தந்தையினுடைய ஆத்துமாவே அவனுக்குப் புத்திரனாக வந்து பிறப்பதாக வேதாதி நூல்கள் கூறுகின்றன; இவ்வாறு கூறுதலை வேதவழிநூலாகிய ஏகாக்கிகாண்டமென்னும் கிரந்தத்தில்-2-ஆவது பிரச்நத்தில் 12-ஆவது கண்டத்தில் "ஆத்மாவை புத்ரநாமாஸி ஸஜீவ சாதச்சதம்" எனவும், விநாயக புராணத்திற் றிரிபுரன் வாம் பெறுபடலம் 8-ல் "தந்தை தானே மகனாகிச் சாருமென்னு முறையானும்" எனவும், பாரதத்தில் திரௌபதி மாலையிட்டசருக்கம் 86-ல் "தெருமந்த விந்தச் சிலை வீரனே தேவர்க்கெல்லாம்-பெருமன் பிறப்பிற் கிவனேமுன் பிதாவுமானன்" எனவும் கூறுமாற்ருலறியலாம்.

௩. மேனை என்பது, பர்வதராஜ பத்தினியின் பெயர்; வானை அளாம்-ஆகாசத்தை யளாவிய; பச்சிமம்-மேலைத்திசை.

நபஞான மாந்தலத் தன்ப ரவாவிய நாற்பொருளை
உபமான மின்றிக்கைம் மாறு கருதா துதவுதலால்
இபமா முகத்தொரு கொம்பேந்து கற்பக மென்றுலகோ
தபிதான முற்று யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௪.

திமிர மறவொளிர் தில்லைச் சபைப்பச் சிமசிகரி
விமரிசை யாகநின் பாதாம் புசமோக மெய்யன்பராம்
பமரங் களுக்குச் சிவாநந்தத் தேனைப் பருகக்கொடுத்
தமர்கற் பகமே யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ரு.

## மூர்த்தி விசேடம்.

உய்வருள் பஞ்ச சிவாத்மக னென்றுனை யோதலினைந்
தெய்வவுள் ளீடாய்த் திகழ்வை நடேசன் றிருவுருமுக்
கைவா முத்தொழி லேனை யிருதொழில் கால்வரலால்
ஐவர்க்கு மூல மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. சா.

---

௪. ஞாந நபம் ஆம் தலத்து - சிதம்பரமாகிய க்ஷேத்திரத்தின் கண்ணே; நாற்பொருள் - அறம் பொருள் இன்பம் வீடு; இபம் - யானை; அபிதானம் - பெயர்; இதனை "அபிதான மாக்குவய நாமமும் பெயரே" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தாலறிக.

ரு. திமிரம் - ஈண்டு அஞ்ஞானவிருள்; பச்சிம சிகரி - மேலைக் கோபுரம்; விமரிசை - மிக்க சிறப்பு; இது வடமொழி. பாதாம் புசமோக மெய்யன்பர் - திருவடித் தாமரைமலர்களில் விருப்பத்தை யுடைய உண்மைப்பத்திமான்கள்; மோகம் - விருப்பம்; இதனை, பிங்கலந்தை நிகண்டில் - கஅகூக - ஆவது சூத்திரத்திற் காண்க. பமரம் - வண்டு; இது பிரமரம் என்ற சொல்லின் றிரிபு; இதனை, மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழில் "பமர மடுப்பக் கடா மெடுத் தூற்று மோர் பகடு நடத்தி" என வருமாற்றாலுணர்க.

சா. உய்வு - ஈடேற்றம். "பஞ்ச சிவாத்மகாய நம:" என்பது, விநாயக சகத்திர நாமத்துள் ஒன்று. ஐந்தெய்வம் - அச்

சகத்திரநாமத்துட் பஞ்சசிவமென்றோதப் பெற்ற ஐந்துமூர்த்திகள். உள்ளீடு - அந்தரங்கம்; உள்ளுறுப்பெனினும் ஒக்கும்; இதனை "உள்ளுணர்ச்சியுள் ளீடிலாப் - பொள்ள னெஞ்சு புரைந்தவே" எனத் திருவெற்றியூர்ப் புராணத்திற் கூறுமாற்றா லறிக. திகழ்தல் - விளங்குதல். நடேசன் திரு உரு முக்கை வா முத்தொழில் ஏனை இருதொழில் கால் வரலால் ஐவர்க்கும் மூலம் - நடேசப் பெருமானது திருவுருவமானது ஐந்தொழில்களினுள்ளே சிருட்டி, திதி, சங்காரமென்னும் முத்தொழில்கள் தமருககரம், அபயகரம், அக்கினிகரமென்னும் மூன்று கைகளில் நிகழ்ந்துவர, மற்றைத் திரோபவம், அநுக்ரஹமென்னும் இரண்டு தொழில்கள் ஊன்றியபாதம், குஞ்சிதபாதமென்னும் இரண்டு கால்களில் நிகழ்ந்து வருதலால், அவ்வைந்தொழில்களையு மியற்றும் பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவ னென்னும் ஐந்து மூர்த்திகளுக்கு மிருப்பிடமான மூலகாரணமாகும் என்க. ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியின் கரசரணவயவங்களிலே பஞ்ச கிர்த்தியமும் நிகழ்ந்து வருமென்பதை "தோற்றந் துடியதனிற் றோயுந் திதி யமைப்பிற்-சாற்றியிடு மங்கியிலே சங்காரம்-ஊற்றமாய் - ஊன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி - நான்ற மலர்ப்பதத்தே நாடு" என்னும் சைவசித்தாந்த சாத்திரத்து ளொன்றாகிய உண்மை நெறிவிளக்கச் செய்யுளாலும் "தானே வகுத்ததுன் றமருகக் கரமே - தனித்தனி வகுத்த சராசரப் பகுதி - யனைத்தையுங் காப்பதுன் னமைத்தகைத் தலமே - தோற்றுபு நின்றவத்தொல்லுல கடங்கலு - மாற்றுவ தாரழ லமைத்ததோர் கரமே - யீட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின் - றூட்டுவ தாகுநின் னூன்றிய பதமே - யடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பங் - கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே - யித்தொழி லைந்துநின் மெய்த்தொழில்" எனச் சிதம்பர மும்மணிக்கோவைச் செய்யுளிற் கூறுமாற்றாலும் அறிக.

## தல விசேடம்.

பூவிற் சிவகலை யத்தயா மத்திற்புக் குப்புலரி
போவதைப் புக்க திருத்தாண் டகமே புலப்படுத்தும்
மேவும் விசேட மதனுற்றில் லைத்திரு வீதியென்பஞ்
சாவர ணச்சூழ் வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. எ.

---

எ. பூவிற் சிவகலை-பூமியின்கட் சிவ க்ஷேத்திரங்களிலுள்ள சிவகலைகளெல்லாம்; புலரி-விடியல். புக்கதிருத்தாண்டகம் என்பது, திருநாவுக்கரசு சுவாமிகளால் ஓதப்பெற்ற கோயிற்றேவாரப் பதிகம். புலப்படுத்தும்-அறிவுறுத்தும்; அதனுல் தில்லைத் திருவீதி என் பஞ்சாவரணச்சூழ்வு விசேடம் மேவும்-அக்காரணத்தாற் றில்லைத் திருவீதி யென்கின்ற ஐந்தாம் பிராகாரத்தின்கண் வலம் வருகையானது விசேடத்தைப் பொருந்தாநிற்குமென்க. வீதிவலம் வரத்தக்க ஆற்றலையடியேற்குத்தந்தருளென்பது குறிப்பெச்சம். தில்லைத்தல விசேடம் சொல்லைக் கடந்ததென்பதையும் வேதத்திற் பிரதிபாதிக்கப்பட்டதென்பதையும் சூத சங்கிதையில் "வித்தக முனிவீர் பஃறலத் துள்ளும் வியாக்கிர புரநனி விசேடம்" எனவும் "மறைசொ லத்தல நிகர்தலம் வானத்து மில்லை-நிறையு மத்தல வாசமே யுததம நெடிதா-அறையும் புண்ணியமுடையவர்க் கேயது கிடைக்கும்-கறையி லத்தல மான்மியங் கரையயான் வலனே" எனவும் கூறுமாற்றுலறியலாம்.

புக்க திருத்தாண்டகத்தில் அர்த்த யாமத்திற் பஃறலமூர்த்திகளைப் புக்கதாக மட்டுஞ் சொல்லியிருக்க, புலரியிற் போவதாகவும் வைத்து ஈண்டுச் சொல்லுவது அமையுமோ வெனில், ஓரூரிற் பலவூராரைவரக் கண்டே னென்றொருவர் சொல்லினும் வந்தோர் தத்தமதூர்க்கு மீண்டுபோவது சொல்லாமலே யமையுமாறு போல் அமையு மென்க; திருவிளையாடற் புராணம் மூர்த்தி விசேடம் 13-ல் "இத்தகு சயம்பு தன்னை யேனைய சயம்பு வெல்லாம்-நித்தமுந் தரிசித் தேகும்" என்றதைச் சிந்திக்கினும் மீண்டு போவது அமையும்.

## தீர்த்த விசேடம்.

வாஞ்சித்துனைச்சிவனை த்தியானித்தாடுவார்க்கொழிக்கும்
போஞ்சந்ம மிச்சந்மஞ் செய்பவத் தைப்பசு போதமறத்
தேய்ஞ்சுதேய்ஞ்சொன்றுஞ்சிவந் தருந் தில்லையிற்றீர்த்தவா
சாஞ்சிவ கங்கை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. அ.

---

அ. வாஞ்சித்து-அன்புவைத்து; ஆடுவார்க்கு போம் சந்மம் இச்சந்மம் செய்பவத்தை ஒழிக்கும்-தன்பான் மூழ்குவோர்க்குச் சென்ற பிறப்புக்களிலும் நிகழுமிப்பிறப்பிலும் செய்துள்ள பாவங் களைப் போக்கடிக்கும். பசுபோதம் அறத் தேய்ஞ்சு தேய்ஞ்சு ஒன்றும் சிவம் தரும்-சீவபோத மெலிந்து மெலிந்து கெடக்கெடச் சிவனோடு துவிதமறக் கலக்குஞ்சிவப்பேற்றையுங் கொடுக்கும். இவ் வாறு கூறியது "சென்றுசென் றணுவாய்த்தேய்ந்துதேய்ந் தொன் றுந் திருப்பெருந்துறையுறை சிவனே" என்னுந் திருவாசகத்தை யுட்கொண்டேயாம்; தேய்ந்து என்பது, தேய்ஞ்சு எனப்போலி யாயிற்று; ஐந்து என்பது ஐஞ்சென்றானாற்போல. தீர்த்தவாசு- ஆம்சிவகங்கை-தீர்த்தங்களுக்குள் அரசுபோன்ற முதன்மையை யுடையதாகிய சிவகெங்கா தீர்த்தமென்க. சிவத்தியானம் தீர்த்த மாடும்போது அவசியமிருக்க வேண்டுமென்பதை "கங்கை யாடி லென்காவிரி யாடிலென்-கொங்கு தண்குமரித்துறை யாடிலென்- ஓங்கு மாகடலோதநீ ராடிலென்-எங்கு மீசனெ னாதவர்க் கில்லையே" என்னுந் தேவாரத்தாலறிக. சிவகெங்கையே தீர்த்த மெல்லாவற்றிற்கும் அரசென்பதை "மாசிலா வுலகிற் றீர்த்தம் வானவ ரனைய தில்லை-ஆசிலா வேதகஞ்செ யகிலவா விகளெ வர்க்கும்-தேசமா ரயன்மால் போல்வ திகழ்திருக் குளமெ வர்க்கும் ஈசனா மென்ன மேலா யெளிதுமா யிருக்கு மன்றே" எனக் கோயிற்புராணத்திற் கூறுதலாலறிக. சிவகெங்கையிற் றீர்த்தமாடு வோர்க்கு எப்படிப்பட்ட பாவமும் நீங்கு மென்பதைச் சூத சங்கி தையில் "வித்தக முனிவீர் பஃறலத் துள்ளும் வியாக்கிர புரானி

இதுமுதல் 57-செய்யுட்கள் விநாயக புராணத்தி
லுள்ள உபாசநாகாண்டக் கதைகளைச்
சுருக்கியமைக்கப்பெற்றன.

பதினெண் புராணம் பகர வொணுமற் பராசரன் சேய்
விதிசொலக்கேட்டுனைப்பூசித்தபின்முற்றும்விண்டனன்முன்
திதிபுரி யென்றுபா சித்தெடுப் பார்க்கெச் செயலுமுற்றும்
அதியரு ளாள வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கூ.

நச்சி யுபாசித்த மூவர்க்கு முத்தொழி னல்கியுன் றன்
விச்சுவ ரூபமுங் காட்டி யகட்டுய்த்து மீள்வித்தனை
கச்சமி லண்ட மதனுட் கிடந்ததைக் கண்டுணர்ந்தார்
அச்சனென் றுன்னை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

விசேடம்" எனவும் "அனைய மாதலத் தவிர்சிவ கங்கைநீ ராடிப்-புனையுமம்பலத் தாடிபொற் பாதமும் போற்றி-வினையி லேந்தெழுத் தாயிரத் தெண்டரம் விதியின்-கினைய நித்தியஞ் செபிக்கி னெப் பாவமு நீங்கும்" எனவும் கூறுதலாலறிக.

கூ. பராசரன் சேய்-வியாச முனிவர்; விதி-பிரமா; முற்றும் விண்டனன்-அப்புராணங்களனைத்தையும் பாடி முடித்தான்; திதி புரி என்று உபாசித்து எடுப்பார்க்கு எச்செயலும் முற்றும்-இரக்ஷிப்பாயாகவென வேண்டி உன்னைப் பூசித்துத் தொடங்குவார் கட்கு எப்படிப்பட்ட காரியங்களும் பூர்த்தியடையும்; அதி அருளாள-பேரருளை யுடையவனே.

௬0. நச்சி - விரும்பி; அகடு - வயிறு; கச்சம் இல் அண்டம் அதனுட் கிடந்ததைக் கண்டு உன்னை அச்சன் என்று உணர்ந்தார்-அளவில்லாத அண்டகோடிகள் அவ்வயிற்றினுள்ளே கிடந்ததைப்

வினைத்தொடக் கத்துனை யெண்ணிப் புகாமையால் விக்கினங்கள்
முனைத்துப்படைப்புக்குறல்கண்டநான்முகன்முன்னோர்
பினைத்துதி செய்திடர் நீங்கிச் சராசர பேதவுல [கற்பம்
கனைத்தையு மீன்று னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

ஈசன் விதிசித்தி புத்தியை நிற்கீய வெய்திமணம் [யென்
பேசலு மீசையைப் பார்த்தா னிசைந்தெம் பிராட்டி செய்
ரோர்சொற்சொன்னாள்சேய்மணக்கின்றவருடன்பாடுலகத்
தாச ரணையா மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கஉ.

---

பார்த்து உன்னைச் சர்வலோக பிதாவென்று தெரிந்து கொண்டனர். அத்தன் என்பது அச்சன் எனமருவி வந்தது. "மச்சமானொடு மலரயன் காண்கிலா-அச்சனுண் மலரடிக் கன்பு செய் மரபுகேள்" எனவும் "பிச்சைநல் காயெனப் பேசினன் மும்முறை-அச்சனு மன்னையு மங்கியென் றோர்ந்தனர்" எனவும் "செச்சை மென்மலர்புரை திருவுருப் பிள்ளையை-அச்சனு மன்னையு மாகிய வண்ணலார்" எனவும் விநாயக புராணத்தில் மருவி வந்தாற்போல. கச்சம்-அளவு; இதனை "கச்சம்யானைக் கழுத்திற் கயிறள வொடுமரக்கால்" எனச் சூடாமணி நிகண்டிற் கூறுதலாலறிக.

கக. முனைத்து உறல்-பகைத்து வருதல்; பினை-பின்பு, இடைக்குறைந்தது.

கஉ. சித்தி புத்தியை நிற்கு ஈய விதி எய்தி மணம் பேசலும் ஈசன் ஈசையைப் பார்த்தான் - சித்திபுத்தியென்னுமுனது திருவருட்சத்திகளை உனக்குத் தரும்பொருட்டு அவர்களைத் தவஞ்செய்து புத்திரிகளாகப்பெற்ற பிரமதேவர் கயிலையங்கிரியிலெய்திக் கலியாணம் பேசினவுடனே சிவபிரான் உமாதேவியாரைப் பார்த்தார். எம்பிராட்டி இசைந்து செய்யென்று ஓர் சொற்சொன்னாள் - சர்வேசுவரியாகிய அவ்வுமாதேவியார் உடன்பட்டுப்

நின்னுரு வின்னிகழ் கின்ற துலகி னிகழ்மரபால்
உன்னறி வைச்செய லைச்சித்தி புத்தியென் றோதப்பிர
மன்மக்க ளாக்கி மணந்தா யுலகும் வதுவரனும்
அந்நிலை யுற்ற தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கா.

பிரமதேவரைப் பார்த்து அவ்வாறு செய்யக்கடவாய் என்று கூறினர். (அதனால்) சேய் மணக்கு ஈன்றவர் உடன்பாடு உலகத்து ஆசாரணை ஆம்-மக்களுடைய கலியாணத்திற்கு அவர்களைப்பெற்ற பிதாமாதா என்னுமிருவர்களுடைய வுடன்பாடானது, உலகத்தில் தொன்றுதொட்டு வழங்கிவரும் வழக்கமாய் விளங்கா நிற்கும். மணத்துக்கு என்பது, மணக்கு என அத்துச்சாரியை பெறுமலுருபேற்றது; "நலக்குரியார் யாரெனில்" என்று திருக்குறளிலும் "வாய்க்கு முடற்கு மனக்கு மினியவுண வாக்கி" என்று திருவெற்றியூர்ப் புராணத்திலும் நலம், மனம் என்பவைகள் சாரியையின்றியுருபேற்று வந்தாற்போல. ஆசாரணை-வழக்கம்.

கக. மரபு-கிரமம். அறிவைச் செயலை-ஞாந சத்தியையுங் கிரியாசத்தியையும்; பிரமன் மக்களாக்கி-பிரமதேவாது பெண் மக்களாம்படிசெய்து; உலகும் வதுவரன் ஆம் அந்நிலை உற்றது-உலகத்திலுள்ளவுயிர்களும் நீ மணந்த காரணத்தால் நாயகி நாயகர்களாய் மணந்து விளங்கும் அந்த நிலைமையிற் றங்கியது. வது-மணமகளென்னும் நாயகி; வரன்-மணமகனென்னும் நாயகன். கடவுள் திருவருட்சத்தியொடுங் கூடுதலே உலக மணத்திற்குக் காரணமென்பதனை "அன்பினர்க் கெளிவந் துள்ள வாதியம் பரமன் மாது, தன்புடையாகச்சேயத் தவிசின் வீற் றிருத்தலோடுந், துன்பகன் றிருபாலாகித் துவன்றிய வுயிர்க ளெல்லாம், இன்பொடு போக மாற்றி யினி தமர் வுற்றவன்றே" எனவும் "காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற் பாற்றோ" எனவும் கந்த புராணத்திற் கூறுமாற்றாலறிவதோடு "இருமுது குரவர் பாத மிமையவர் வணங்கி யிந்தத் - திருமணங் காண்டல் பெற்றே முய்ந்தனந் திரைநீர் வைப்பின் - மருவினர் வதுவை செய்யு மிடந்

அருவுரு வாய சதாசிவன் றந்தையு மவ்வண்ணமாய்
மருவு மநோந்மணி மாதாவு மென்றுன் மரபறிய
இருவரு நின்சித்தி புத்தி மணத்தெய்தி யீந்தருளுன்
அருமை தெரித்தா ரடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

மதுகை டவரை வெலும்வலி தாவென்று மாலரனைத்
துதிசெய வீசன் கணாநாந் துவாமநுச் சொற்றநுட்டி
அதுகை வருமென வாற்றி யவரைவென் றண்ணினன்மால்
அதிகௌ ரவத்தை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

தொறு மன்னி யாங்காங்—கிருநல முதவல் வேண்டு மிவ்விரு வீரு மென்றார்" எனக் காஞ்சிப்புராணம் திருமணப் படலத்திற் பார்வதி பரமேசுவரர்களைத் தேவர்கள் வேண்டிக்கொண்டிருத்தலாலும் அறியலாம்.

கச. அவ்வண்ணமாய் மருவும் மநோந்மணி-அந்தச் சதாசிவனுக்கமைந்த அருவுருவடிவமே தனக்கும் வடிவமாயமைந்துள்ள மநோன்மணியம்மையார். மரபு-வம்மிசம்; இதனை "சூரியன்மரபுக்குமோர் தொன்மறு, ஆரியன் பிறந்தாக்கினை யாமரோ" எனக் கம்பராமாயணம் வாலிவதைப் படலத்திற் கூறுமாற்றாலறிக.

கரு. மது கைடவர்-மது எனவும் கைடவன் எனவும் பெயர் பூண்டு விட்டுணுமூர்த்தியின் காதிற்றோன்றிய அசுரரிருவர்; "கணாநாந்துவா" என்பது விநாயகாது ஷடாக்ஷரமந்திரம்; மநு-மந்திரம்; அது-நீ வேண்டிய மதுகைடவரை வெல்லத்தக்க வலியாகிய அது; கைவருதல் - சாத்தியமாதல். அவரை - அம்மது கைடவரை; அதிகௌரவம்-மிக்கமேன்மை.

முக்கல மாதவன் சார்பாற் கொடும்பிணி முற்றுமற்றுத்
தக்க னரசாதி யின்படைந் தான்பத் தரைச்சார்ந்தவர்
துக்க மகன்று சுகம்பெற னிச்சயந் தூயர்தொடர்
பைக்கொடுத் தேனு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே

வல்லாளன் ஞன்ஞெழு நின்மூர்த்தி கோயிற்கு மாறுசெய்த
கல்யாணன் றன்னைச்சபித்தலுமெய்மூக்குக்கண்செவிவாய்
எல்லாமுங்கெட்டனவொன்னார்த்தெறலுணையெய்துதவர்க்
கல்லா லெவர்க்குண் டடியேன் றுயர்கெடுத் தாண்டருளே

பல்லி நகர்ப்புறம் பாலரொ டுன்பூசை பண்ணியுற்ற
வல்லா ளனைமேல் வருவதோ ராமன் மரத்தப்பனுங்
கல்யாணன் கட்டுங்கட் டையரிற் போய்நீ கடாட்சித்தலும்
அல்லாப்பொ டற்றதடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

கசு. முக்கலர் என்பவர், விநாயக பக்த சிகாமணியாகிய ஓர் இருடி. தக்கன் என்பவன் ஓர் அரசிளங்குமரன்; இச்செய்யுளில் நான்காமடியெடுப்பில் ஐயுருபு ஆதியாக வந்தது "வித்தந் தியாக முதவா வுலோபர்க்கு வீணிற்சொற்பாட்-டைத்தந் தியாக பதி யென்பரான்முத லாம்பிள்ளையை" என மறைசையந்தாதியில் வந்திருப்பதுபோலும்.

கஎ. ஒன்னார்த் தெறல்-பகைவரை அழித்தல்; இவ்வாற்றல் பதியை யடைந்த தவசிரேட்டர்களுக்குண்டென்பதை "ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு, மெண்ணிற் றவத்தான் வரும்" என்னுந் திருக்குறளாலறிக.

கஅ. ஐயரில்-பிராமணரைப்போல; இல் என்னுமைந்தனுருபு ஈண்டு ஒப்புப்பொருளில் வந்தது. அல்லாத்தல்-சுழலுதல்; இதனை "ஆக்கமிழந்தேமென் றல்லாவா ருக்க, மொருவந்தங் கைத்துடையார்" என்னுந் திருக்குறளாலறிக.

நலன்புகொண்டாட்டயர்நாட்பல்லிவல்லாளநாய்கச்சிருன்
உலங்கொடுவைத்தொருகொம்பனென்றேதியுனையதிற்பூச்
சலங்கந்த மாதியி னூற்புரி யாரா தனைக்குமுத்தி
அலங்கொண்டளித்தாயடியேன்றுயர்கெடுத்தாண்டருளே.

முக்க ணுருத்திரன் வேதனுன் பான்முக் கலமுனிபாற்
றக்கன்வீ மன்காதி சேய்பால் வியாதன் சதுமுகன்பாற்
புக்கேற் றநுட்டித்த திச்சித்த யாவும் புகுத்துமுன்னோர்
அக்க ரமநு வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. உ௦.

துதிதுதிக்கைச்சுமுகர்க்கன்புடையேன்றொடேன்பிறனில்
மதிமயங் கேனெனக் காரண காரிய மாய்வைத்துப்பூ
பதிருக்குமாங்கன்வலிந்தமுகுந்தையைப்பார்த்தறைந்தான்
அதிகூ ரனவ னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. உக.

---

கக. நல்லன்பு என வாற்பாலது, நலன்பு என வந்தது; ஈண்டுத் தனிக்குறின்முன்னொற் றிரட்டாமை எதுகை நோக்கி. பல்லி என்பது, வல்லாளனிருந்த ஓர் நகரத்தின் பெயர். நாய்கச் சிறுன்-வைசியச் சிறுவன்; உலம்-திரள்கல்; ஒருகொம்பன்-ஏக தந்தனென்னும் விநாயகக் கடவுள்; கந்தம்-சந்தனம்; அலம்-போதுமென்னுந் திருப்தி; இதனை "அல்லற்பிறவி யலமலம் விண்ணுடுறைந்து-தொல்லைத் திருநுகருந் துன்பு மலமலமால்" என வருங் கந்தபுராணச் செய்யுளாலறிக.

உ௦. காதிசேய்-விசுவாமித்திர முனிவர்; இம்முனிவருடைய பிதாவிற்குக் காதி என்று பெயர்; இதனை "காதி காதல னிகர்க்கு மாற் கன்னிமா நீத்தம்" எனக் கந்தபுராணத்திற் கூறுமாற்றுலறிக. ஓர் அக்கரமநு-விநாயகப் பெருமானுடைய ஏகாக்ஷர மந்திரம்.

உக. துதி-யாவருந் துதிக்கின்ற; துதிதுதிக்கை-வினைத்தொகை. இச்செய்யுளிற் கண்டபடி சுமுகர்க்கன்புடைமையைக் காரணமாகவும் பிறனிற்றொடாமை மதிமயங்காமைகளை அதன்

ஏறுயர்த் தோன்கீரற் காழியுண் டோனு லிலக்கணத்தைக்
கூறுவித் தாங்காண் டளப்பாற்குத் தாஞ்சொலிக் கோதமன்பின்
நூறு மகற்கநுட் டித்துய்யப் பொன்னு னுவல்வித்ததுன்
ஆறெழுத் தன்றோ வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

விண்ணுளி கௌதமன் சாபத் துறயோநி மேனிமுற்றும்
புண்ணுளி யாயுனைப் போற்றக் கதம்ப புரியிலவை
கண்ணு யவனு யிரங்கண்ண னுகக் கருணைசெய்தாய்
அண்ணு முருகற் கடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

காரியமாகவும் வைத்தறைந்திருத்தலை, விநாயக புராணம் உருக்குமாங்கதன் சாபம்பெற்ற படலம், 11-ல் "சுந்தரியதுவே யன்றிச் சுமுகர்தா ளிறைஞ்சுமன்பன்-சிந்தைவேற் றணங்கனுர் பாற்செருமந்துஞ் செல்லாதன்றே" எனக் கூறுமாற்ருலறிக. உருக்குமாங்கதன், உருக்குமாங்கன் எனவுஞ் சொல்லப்படுதலை, விநாயக புராணம் 30 ஆவது படலம் 1-ல், "உருக்குமாங்கனை யுற்றனர்" என்பதனுலறிக.

உஉ. ஏறுயர்த்தோன்-சிவபிரான். கீரன்-நக்கீர ரென்னுஞ் சங்கப்புலவர். ஆழியுண்டோன்-அகத்திய முநிவர். ஆண்டளப்பான் என்பதும் பொன் என்பதும், வியாழ பகவானுக்குப் பெயர். கோதமன்-கௌதம முநிவர்; இப்பிரயோகத்தை "வேத முனி கோதமனுந் தலைப்பட்டு மீள்வானேர்-போதளவிற் கற்புடைய பொன்மாலைமனைபுகுந்தான்" எனத் திருவிளையாடற் புராணத்திற் கூறுமாற்ருலறிக. நூறுமகன்-சதமக னென்னும் தேவேந்திரன். ஆறெழுத்து-விநாயக ஷடாக்ஷரமந்திரம். கீரனுக்கிலக்கணமுபதேசித்த சரித்திரம், திருவிளையாடற் புராணத்திலுள்ளது.

உ௩. விண்ணுளி-தேவேந்திரன். கௌதமன்-அகலிகா நாதனுனகௌதம முனிவர். யோநி-பெண்குறி. புண்ணுளி-யோநியாகிய ரணமுடையோன். கதம்பபுரி என்பது ஓர் விநாயக க்ஷேத்திரம். அவைகண்ணுய்-அந்த ஆயிரம் யோநிகளும் ஆயிரங் கண்களாகப்

வீடாத வன்பெனக் குன்பா லுறவருள் விண்ணர்வர்கோன்
கூடா வொழுக்கப் பவம்போக்கப் பூசை குயிற்றுமந்நாட்
கேடா மெவைக்கு முறுகா ரணங்கிழ வோய்பதத்தன்
பாடாமை யென்று னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

பூங்கழற் பூசை கதம்ப புரியிற் புரிந்தடைந்தான்
ஆங்கண் முகுந்தை யிடுசாப நீத்தது மன்றியுன்றன்
ஓங்குல கைத்தந்தை தாய்சேனை யாதிய ரோடுருக்கு
மாங்கத ராச னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. உரு.

பூசித் தெழுத்தா றெணித்தவஞ் செய்துற்றூர் புட்பகத்திற்
தேசிற் கிருச்ச மதனு மவன்சேய் திரிபுரனும்
மூசிச் சுரர்தவர் யாரும் பணிமொய்ம்பு முப்புரத்தோ
டாசில் கதியு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. உசா.

---

பெற்று. முருகற்கு அண்ணு-முருகக்கடவுளுக்குத் தமயனே; விளி.

உச. கூடாவொழுக்கப் பவம்-பரதாரகமனமாகிய துர்நடத்தைப் பாவம். குயிற்றுதல்-செய்தல். கேடுகட்கெல்லாங் காரணம் கடவுள்பாற் பேரன்பில்லாமையேயாமென்று இந்திரன் தோத்திரஞ் செய்திருத்தலே, விநாயக புராணம் இந்திரன் பூசித்த படலம் 15-ற் காண்க.

உரு. கதம்பபுரி என்பது ஓர் விநாயக க்ஷேத்திரம். உன்றன் ஓங்கு உலகை-உன்னுடைய உயர்ந்த உலகமாகிய சாலோக பதவியை.

உசா. எழுத்துஆறு-விநாயக ஷடாக்ஷர மந்திரம். புட்பகம்-புட்பகநகரம்; இதனை இக்காலத்தார் வங்காளம் எனவும் கற்கத்தா எனவும் வழங்குகின்றனர். தேசு-தவவொளி. மூசி-மொய்த்து. மொய்ம்பு-வல்லபம். கதி-மோக்ஷம்; இதனை "கேவலங் கைவலங் கதிசித்தி மோக்கம்" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தாலறிக.

துதிவா னவருய்யச் சிந்தா மணிப்பேர்ச் சுமுகருரு
அதுவா லியமலைத் தேற்றீதி யென்றிரந் தையரிற்போய்
மதின்மூன் றினனைத் தூதுய்த்தீச னோடு மலையவெழுப்
பதிசூழ்ச் சியனீ யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

வானவர்மன்னவர்செய்தொழிலும்மெழுவாயிலுன்றன்
ஈனமி லாவரு ளெய்திலு லேமுற்று மென்பதைமுன்
தானவர் முப்புர நீற்ற வரனுன் றயாவைப்பெற்ற
தானது தேற்று மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

உஎ. துதி-தோத்திரஞ்செய்த; துதிவானவர்-வினைத் தொகை. சுமுகர் உரு அது-விநாயகரது மூர்த்தமாகிய அது. வாலியமலைத்து-வெண்ணிறமுடைய கயிலாய மலையின்கண்ணுள் ளது. ஐயரிற்போய்-பிராமணரைப்போற்சென்று; இல் என்னும் ஐந்தனுருபு ஈண்டு ஒப்புப் பொருளில் வந்தது. மதில் மூன்றினன்-திரிபுரன். தூது உய்த்து-தூதனுப்பி. மலைய எழுப்பு-போர் செய்ய எழுப்பிய. அதிசூழ்ச்சியன்-மிக்க தந்திரமுடையான்.

உஅ. எழுவாயில்-முதலில்; ஆரம்பத்திலெனினுமமையும். எய்திலுலே என்பதில் ஏகாரம், தேற்றப் பொருளில் வந்தது. தானவர்-அசுரர். தயா-அருள்; தயாவென்னும் ஆவீற்றுவடசொல் ஐயீறாகாமலும் வருமென்பதை "தாயே யென்றுன் றுளடைந் தேன்றயாநீ யென்பா லில்லையே" எனத் திருவாசகம் ஆனந்த மாலையிலும் "தம்பியா ருளராக வேண்டுமென வைத்த தயா-உம்ப ருலகணையவுறு நிலைவிலக்க வுயிர்தாங்கி" எனப் பெரியபுராணத் திலும் "தயாமிகுங் கணேச னென்னுஞ் சாமியாமகத்திற்றாய-வியாதனே" என விநாயக புராணத்திலும் வருமாற்றாலறிக.

முச்சோ வெரிக்க மகேச்சுர னுன்னைமுன் னுதெழத்தேர்
அச்சீ டழிந்ததென் ருலுன் பெருமை யபரிமிதம்
பொச்சாப் பறவதற் கோர்சான் றெனுந்தலம் பூதலத்தில்
அச்சிறு பாக்க மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

நீதார வெற்பின் மகேசன் மகேசையாய் நின்றவளே
மாதார வல்லபை யானு ளிரண்டுரு வத்துவொன்றே
கோதா ரெயிலடற் கீந்து வரம்வரங் கொண்டதுமோர்
ஆதா ரமிதற் கடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௩௦.

---

உக. முச்சோ-மும்மதில். முன்னுதல்-ஈண்டுத்தியானித்தல். அச்சு ஈடழிதல்-அச்சுவலியழிந்து முறிதல்; ஈடழிதல், வலியழித லென்னும் பொருடருதலை "இருகோட் டொருகரி யீடழித் துரித்தனை" எனத் தேவாரத்தில் வருமாற்ருலறிக. விநாயகா ராதனமின்றித் திரிபுர தஹனத்துக் கெழுந்தபோது சிவபெருமா னது தேர் அச்சு முறிந்தமையை" தச்சு விடுத்தலுந் தாமடி யிட்டலும், அச்சு முறிந்த தென்றுந்தீபற, அழிந்தன முப்புர முந் தீபற" என்னுந் திருவாசகத்தாலும் "முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம் அச்சது பொடிசெய்த அதிதீரன்" எனவருந் திருப் புகழாலும் அறிக. அபரிமிதம்-அளவில்லாதது. பொச்சாப்பு-மறதி. சான்று-சாக்ஷி. பூதலம்-மண்ணுலகம். அச்சிறுபாக்கம்-ஓர் சிவ க்ஷேத்திரம்.

௩௦. தாரவெற்பு-வெள்ளிமலை. தாரம்-மனைவி. இரண்டு உரு வத்து ஒன்றே-மகேசனுங் கணேசனுமாகிய இரண்டு மூர்த்திகட் கும் மூர்த்திமானாகிய பரவஸ்து ஒன்றேயாம். ஒன்றேயாமென் பதை "விளம்புமீசனென்னுமத் திருமேனிக்கும் விநாயகனென்ன யாரும்-பன்னுமித் திருமேனிக்கும் பார்த்திடிற் சற்றே வேறு" எனவும் "திருவுரு விரண்டன் மாட்டுஞ் சிவணிய வத்து வொன்றே" எனவும் விநாயக புராணம் மகோற்கடர் திருவவதாரப்

மூவரும் வாசமுஞ் சீதங்கொண் டாங்குற முப்புரமா
தேவனெழித்தானவன்சேய்நிற்கேற்றசெயன்மயன்முற்
றோவவொழிப்பது மீங்குற வென்மெய் யுயிர்க்குறுதி
யாவநிற் பிப்பு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௩௧.

---

படலம் 812-813-ஆம் செய்யுட்களிலும் "உருவம்வே றன்றி யைந்து முகனறு முகனென் றேதுந்-திருவுரு விரண்டன் மாட் டுஞ் சிவமெனும் யாமே மன்ற-பொருவிலா ருயிராய் நிற்பேம் பொலிந்தவிவ் வுருவி னின்றுந்-தருவா மவண தாங்குத் தருவா மிவண தாமே" எனத் தணிகைப் புராணம் வீராட்டகாசப் படலம் 97-ஆம் செய்யுளிலும் கூறப்படுதலாலறிக. கோதார் எயில் அடற்கு வரம் ஈந்து வரம் கொண்டதும் இதற்கு ஓர் ஆதாரம். குற்றமுடையோராகிய அசுரர்களது முப்புரத்தை எரித்தற்கு மகேசப்பெருமானுக்கு வரங்கொடுத்து அப்பெருமான்பால் நீ எதிர்வரம் பெற்றதும், வத்துவொன்றே யென்னு மிவ்விஷயத் திற்கு தக்க ஓராதரவாகும்; வஸ்து என்பது, வத்து என வந்தது. ஆதாரம்-ஆதரவு; இதனை "ஆதாரமிலே னருளைப்பெறவே நீதா னொரு சற்று நினைந்திலையே" எனக் கந்தரநுபூதியிற் கூறுமாற்றா லறிக; வரங்கொடுத் தெதிர்வரம் பெற்றமையை, விநாயக புராணம் திரிபுரதகனப் படலத்தில் 27-முதல் 39-வரைக்குமுள்ள செய்யுட் களிற் காண்க.

௩௧. மூவர்-திரிபுரத்திற் பௌத்தாவதாரங்கொண்டு சென்று போதித்த விட்டுணு மூர்த்தியினது சூழ்ச்சிப் போதனையி லகப்படாத சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்ற பெயரையுடைய மூன்று பேர்கள்; வாசம்-அவரது இருப்பிடம்; சீதம் கொண்டு ஆங்கு உற-குளிர்ச்சியைப்பொருந்தி அம்முப்புரத்தின்கட் டங்க. திரிபுரதஹந காலத்தில் மேற்கூறிய மூவரும் வாசமும் எரிபடாமற் குளிர்ச்சியுடன் றங்கினமையை "முப்பு ரங்களின் மூவர் புத்தன் மொழித்தி றத்து மயங்கிடா-தப்பணிந்தவர் தாள்

தங்கை யுமையவண் மூத்தா ளிமாசல சம்பவத்தாற்
கங்கையவட்குமுன் னேமுடிப் பித்திகல் யாணமென்றுன்
துங்கச் சதுர்த்தி விரத மிருந்து சொலமுடித்தாய்
அங்க துமைத்தாய்க் கடியேன் றுயர்கெடுத்தாண்டருளே

பணிந்தரு ளாற்றி னின்றன ராதலாற்-பொய்ப்பு ரந்தபு காலை நீற்றறை நாவின் மன்னவர் போலெரி-தப்பி வாழ்ந்தன ரீச ஞணையி னிற்பவர்க் கிடர் சாருமோ" எனக் காஞ்சிப்புராணம் முப்புராரி கோட்டப்படலத்திலும் "உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்-டெய்யவல் லானுக்கே யுந்தீபற-இளமுலை பங்க னென்றுந்தீபற" எனத் திருவாசகத்திலும் "எரிந்திடா மூவர் நிற்பப்-புரமது தகனஞ் செய்த புண்ணியப் புனித மூர்த்தி" எனத் திருநெல்வேலிப் புராணம் காமதகனச் சருக்கத்திலும் கூறுமாற்றாலறிக. முற்றும் ஒவ-முழுதும் ஒழிய; உம்மை விகாரத் தாற் றொக்கது. மெய்-சரீரம். ஆவ என்பது, அஃறிணைப்பன்மை வினையாலணையும் பெயர்.

௲உ. இமாசல சம்பவத்தால் உமையவள் தங்கை மூத்தாள் கங்கை-இமயமலையிற் றோன்றிய முறையால் பார்ப்பதிதேவி தங்கையும் கங்காதேவி தமக்கையுமாவர். அவட்கு முன்னே கல்யாணம் முடிப்பித்தி என்று உன் துங்கச் சதுர்த்தி விரத மிருந்து சொல உமைத்தாய்க்கு அங்கு அது முடித்தாய்-அக் கங்கையின் விவாகத்திற்கு முன்னரே எனது விவாகத்தை முடித் துத்தாக் கடவாய் என்று உனது உயர்ந்த விநாயக சதுர்த்தி விரத மநுட்டித்துத் தெரிவிக்கப் பார்ப்பதியாகிய உனது தாய்க்கு இமாசலமாகிய அந்த இடத்தில் அந்த விவாகத்தை அவ்வாறே பூர்த்திபண்ணி வைத்தாய்.

சீரலை வாய்தென் பழமுதிர் சோலை திருப்பரங்குன்
றேரகங் குன்றுதோ றாடல் பழனியில் லேய்ந்தகுக
வீர னநுட்டித் தனனேற் சடக்கர மேன்மையினை
ஆர்சொல வல்லா ரடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

ஏற்ற மிகுங்கர்த் தமன்சந்தி ராங்கத னிந்துமதி
மாற்றருங் காம னநந்த னுருக்கு மணிநளன்முற்
சாற்றிவர் துன்பற்றின் பைப்பூர்வ பக்கச் சதுர்த்தியினேன்
பாற்றி யடைந்தா ரடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

௩௩. சீரலைவாய்-திருச்செந்தூர். பழமுதிர் சோலை-அழகர் கோயில். ஏரகம்-சுவாமி மலை. இல் என்பதற்கு-திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, சுவாமிமலை, பூமண்டலத்திலுள்ள சமஸ்த மலைகள், அழகர் கோயில் என்னும் ஆறு படைவீடெனப் பொருள் கொள்க. குகவீரன்-சிவ கோடிகளது உள்ளக்குகைதோறும் வசித்தலாற் குகனென்னும் பெயரையுடைய சுத்தவீரனாகிய ஸ்ரீ ஷண்முகப்பெருமான் என்க; தணிகைப்புராணம் வீராட்ட காசப்படலத்தில் "சாருமெவ் வுயிருந்தன்வயமாக்கித் தளர்க்குமா ணவப்பகையோடும்-சூரனை முதலாந் துளக்கரும் பகையுந் துலங்குமிப் பிரணவப் பொருளாம்-வீரனிவின்றே விளிந்ததென் றளத்து விரைந்தெழும் வீரத்தின் குறிப்பின்-ஆரமர் முடியோ னார்த்தவி னைய தவ்விடம் வீராட்டகாசம்" என்ற செய்யுட்படி பரமசிவனால் வீரனென்றெடுத்துக் கூறிப் பாராட்டப்பெற்ற ஷண்முகப்பெருமானை, சிற்றறிவுடைய நாமும் ஈண்டு வீரனெனப் பாராட்டியுவந்ததானது "பல்லாண்டென்னும் பதங்கடந்தா னுக்கே பல்லாண்டு கூறுதுமே" என ஒரு காலத்தும் அழியாத கடவுளுக்குத் திருப்பல்லாண்டுத் திருமுறை பாடியுவந்ததைப் போலும். சடக்கரம்-விநாயக ஷடாக்ஷர மந்திரம்.

௩௪. மால்தருங் காமன்-உயிர்களுக்குக் காமமயக்கத்தைத் தருகின்ற மந்மதன். அநந்தன்-ஆதிசேடன். உருக்குமணி-கிருட்டிண பகவானது மனைவி.

திங்கட் கலைதேய் பருவச் சதுர்த்தி திதியினுன்றுட்
கொங்கட்ட வீசலர் தூய்நோற்பவர்க்கருள் கூர்ந்தவர்தஞ்
சங்கட்டம் போக்கலா லஃதைச்சங் கட்ட சதுர்த்தியென்பர்
அங்கட்ட திக்கோ ரடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

நமனூர் வளங்கண்டு மீளு ரதர்கும்பி நண்ணினருன்
தமரெனத் தேர்புரு சுண்டிசங் கட்ட சதுர்த்திவிர
தமவர்க்கென் றாற்றித்தத் தஞ்செயக் கும்பி தணந்தவர்கள்
அமருல குற்று ரடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௩௬.

குவ்வாய்வளர்குசன்கோளாம்வரங்கொளுங்காற்சதுர்த்தி
தெவ்வாரமென்னதினேற்பார்க்கருண்மிகச்செய்யெனலுஞ்
செவ்வாய்ச்சங்கட்டசதுர்த்திமேலாகுகசெய்துமென்றுய்
அவ்வாற்றின்மேலஃதடியேன்றுயர்கெடுத்தாண்டருளே.

---

௩௫. திங்கட் கலைதேய் பருவச் சதுர்த்தி-அபரபக்ஷசதுர்த்தி. கொங்கு அட்ட வீசு அலர்-வாசனையை அள்ளிக்கொள்ளும்படி வீசுகின்ற புஷ்பம்; அட்டுதல்-அள்ளிக்கொள்ளுதல்; இதனை "ஆளிலை யெம்பெருமா னவையட்டித்தரப் பணியே" என வருந் தேவாரத்தாலறிக. அட்டதிக்கோர்-எண்டிசையுள்ளார்.

௩௬. நமன் ஊர்-யமபுரம். கும்பி-நரகம்; இதனைப் பிங்கலந்தை 455-ஆம் சூத்திரத்திற் காண்க. தேர்-தேர்ந்த; இதுவினைத்தொகை. புருசுண்டி என்பது, விநாயக சாரூபம் பெற்ற ஒரு பக்தசிகாமணியின் பெயர். விரதம் அவர்க்கு என்று ஆற்றி-விரதத்தை அத்தமருக்கென்று சங்கற்பித்துச் செய்து என்க. அமருலகு-தேவருலகம்; அமரருலகு என்பது அமருலகு என மருவி வந்தது; "அணியாயம ருலக மாள்வதற் கியாதுமையுற வில்லையே" எனத் தேவாரத்திலும் "அடியா ரமருலக மாளநீ யாளாதே" எனத் திருவிசைப்பாவிலும் வந்தாற்போல.

௩௭. கு ஆய் வளர்குசன்-பூமியாகிய தாயினுல் வளர்க்கப்பெற்ற செவ்வாய் என்க; என்கவே, பூமிதேவியானவள் செவ்

சந்திர னெள்ளனும் பார்க்கப் படாளுைச் சபித்ததனை
வந்தவன் வேண்டலுஞ்சிங்க சதுர்த்திமட் டாக்கித்தந்தாய்
இந்துத யஞ்சங் கடசதுர்த் திப்பூசைக் கேற்றத்ததாம்
அந்த வரமு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௧அ.

விடைகா மாதுன் னவந்தித் தளிமேய் விடாமழைபாற்
புடைபெய ராதுட் சுழன்றிட வாய்பொதி புற்சிந்தியுன்
இடைவளி யாலுற வேற்றவை மூன்றும்பே ரின்பவுல
கடையச்செய்தாய்நீயடியேன் றுயர்கெடுத்தாண்டருளே.

---

வாய்க்கு, வளர்த்த செவிலித்தாயென்பது பெறப்படும்; கு-பூமி; ஆய்-தாய்; குசன்-செவ்வாய். கோள் ஆம் வரம்-சூரியாதி நவக்கிரகங்களுள் தானொரு கிரகமாயிருந்து விளங்குதற் கேதுவாகிய வரம்; கோள்-கிரகம். சதுர்த்தி தெவ் என் வாரத்தில் நோற்பார்க்கு - சதுர்த்தியைக்கொண்ட என்னுடைய செவ்வாய் என்னுங்கிழமையில் விரதமிருப்பவர்களுக்கு; தெவ்வுதல்-கொள்ளுதல்; இதனை "கொள்கையும் பகையுந் தெவ்வென லாகும்" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தாலறிக; வாரம்-கிழமை; இதனை "வாரநீர்க் கரையே யன்பு மலைச்சாரல் கிழமை பங்காம்" என்னுஞ் சூடாமணி நிகண்டுச் செய்யுளாலறிக.மேல் ஆகுக-ஏனைய சதுர்த்திகளினின்றும் இது விசேடமாய் விளங்குக; ஆகுக என்பது, வியங்கோண்முற்று. அஃது என்பது, மேற்கூறிய அங்காரக சதுர்த்தியைக்குறித்த பண்டறிசுட்டு. மேல்-மேலாந்தன்மைத்து.

௧அ. படாளுக என வரற்பாலது, ஆக என்னும் வினையெச்சத்திறு தொக்கிப் படாளு எனவந்தது; கந்த புராணத்தில் "மேனாளகி லந்தா மெல்லியலா-வானுவரு டன்னை யளித்தொரு பால்" என்ற செய்யுளில் மெல்லியலாக என வரற்பாலது மெல்லியலா எனத் தொக்கிவந்தாற்போல. சிங்கசதுர்த்தி-ஆவணிமாசப் பூர்வபக்ஷ சதுர்த்தி. இந்து உதயம்-சந்திரோதய காலம்.

௧௯. விடை-இடபம். காம் - கழுதை. மாது-பெண். அவந்தி-முத்தி க்ஷேத்திரத்துளொன்றாகிய அவந்திமாநகரம். தளி-கோயில்.

கோற்றுறும் வீணை முனிநா ரதன்வேண்டு கோட்கிசைந்து
போற்று மிதிலைச் சனக னரண்மனைப் புக்கசனம்
ஏற்றுண்ட போதுன் னெதிர்நின்று வீசு மிளவரசன்
ஞற்றுந் தவமென் னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

பாக்கியஞ் செய்தவி னீபோய் மிதிலைப் பதிக்கரசைத்
தூக்கி யகம்பிர மக்கோளி னின்றுஞ் சுகாநுபவ
தீர்க்கம் பெறமுப் பொருளியல் போதிச்சித் தாந்தசைவன்
ஆக்கிப் புரந்தா யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

வாய்பொதிபுல்-வாயின்கண் அடக்கப்பட்ட அறுகம்புல். பொதிதல் என்பது, அடக்குதலென்னும் பொருடருமென்பதை "மறந்தவிர் கற்பினுடன் மனம் பொதிந்து" எனத் திருவிளையாடற் புராணத்திற் கூறுமாற்றாலறிக. உன்னிடை-உனது திருமேனியினிடத்து; இடை-ஏழனுருபு. வளி-காற்று. ஏற்று-அப்புற்களை யர்ச்சனையாக வொப்புக்கொண்டு. அவை மூன்றும்-விடையும் காமும் மாதுமென்னுமவை மூன்றும். பேரின்பவுலகு-மோக்ஷலோகம்.

சo. கோல்துறும் வீணை-தண்டஞ் செருகிய யாழ்; அசனம்-உணவு; இளவரசு-ஜநகனது குமாரனுகிய பாலியராஜன்.

சக. மிதிலைப் பதிக்கு அரசு-ஜநகராஜன். அகம்பிரமக் கோள்-நான் பிரம மென்னும் மாயாவாத மதக்கொள்கை. தீர்க்கம்-நிச்சயம்; இதனை "தீர்க்கமே தரிப்பு மன்ற தேறிவை நிச்சயப் பேர்" எனச் சூடாமணி நிகண்டுட் கூறுதலாலறிக. முப்பொருளியல்பு-பதிபசுபாச லக்ஷணம். ஜநகராஜனைச் சித்தாந்த சைவனுக்கி யிரக்ஷித்ததான இந்த விநாயகபுராண சரித்திரத்தைத் திருப்பெருந்துறைப் புராணத்தில் "மன்னுபுகழ் மிகுசனகன் மாயாவாதத்தை யொரீஇப்-பன்னுசிவா கமப்பாவை படிந்து முத்திபெற்ற திறம்-முன்னுமுப புராணத்துட் பார்க்கவமு மொழிதருமால்-இன்னுமது கொளறெளிவா மிதுகோடற் பொருட்டன்றே" எனக் கூறியிருப்பதூஉம் ஈண்டுச் சிந்திக்கற் பாலதாம்.

விரோசனை யோடு திரிசிர சந்தணன் மேஞ்சிற்றிலை
வரோதயனை யறுகேற் றுண்டு மாளிகை யாக்கச்சுகித்
திரோமிதி லுன்றுளிணையீதி யென்னப்பேரின்பளித்தாய்
அரோக வுடற்றந் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

அறுகேற்றங்காட்டக்கவுண்டின்னியனுய்த்தவாசிரையை
அறுகொன்றிதனெடைபொன்றாவெனலும்விண்ணுளிதுலை
அறுக்கெதிர்பொன் னகர்ப்பொன் னளகைப்பொன் யாவுமிட
அறுகே கனத்த தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

சஉ. திரிசிரசு அந்தணன்-மிதிலா நகரத்திலுள்ள விநாயக பக்தசிகாமணியாகிய திரிசிரனென்னும் பெயரையுடைய பிராமணர்; விரோசனை என்பது, திரிசிரசந்தணருடைய பத்தினியாரின் பெயர். மேவும் என்பது, மேம் என வந்தது. சிற்றில்-பழங்கூரையாலமைந்துள்ள சிறு வீடு. வரோதயன் - சிரேட்டமாகிய திருவருட்டிருமேனித் தோற்றத்தை யுடையான்; இதனை "மந்தாகினி தந்த வரோதயனே" எனக் கந்தரனுபூதியில் வருமாற்றாலறிக. அறுகு ஏற்று உண்டு-அறுகம்புல்லை யாசித்துப் புசித்து. மாளிகை-அரண்மனை. சுகித்து இரோம் இதில்-அற்ப சுகாநுபவமுற்று இருக்கமாட்டோம் இந்த மாளிகையின் கண்ணே என்க. அரோக உடல்-நோயற்ற சரீரத்தை.

சங. அறுகு ஏற்றம்-அறுகினது மேன்மை. கவுண்டின்னியன்-கவுண்டின்னிய முனிவர். ஆசிரையை என்பது-கவுண்டின்னியமுனிவரது பத்தினியாரின் பெயர். எடை-நிறை. பொன் தா எனலும்-பொன்னைத் தாக்கடவா யென்றவுடன். விண்ணுளி-இந்திரன். துலை-தராசு. அறுக்கு எதிர்-அறுகிட்டதட்டிற் கெதிர்த்தட்டிலே. பொன்னகர்ப் பொன்-தேவலோகத்திலுள்ள தங்கம். அளகைப் பொன்-குபேரலோகத்திலுள்ள தங்கம். இட-இட்டு நிறுக்க.

பாரூ டகஞ்செய் யாக்கன்வே டன்வனிப் பாலிவரத்
தூரூ டழையாங் குறுநின் றூருத்தோய் தலுமவர்கீழ்ச்
சாரூ டணந்துசா லோகமுற் றார்நின்னாற் சார்ந்தாதத்
தாரூடராகி யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௪௪.

மாலையில் வாய்தற் படியி லிருந்துன் மடியிருத்தி
வாலுகி ராற்கிண் டளாந்திணை யாய்க்கறை வாய்மடென்று
நீல நிறமாற் கிரணிய னைக்கொல்ல நீ கருணை
யாலுத்தி சொற்றா யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

௪௪. பார் ஊடு-பூமியினிடத்து; ஊடு-இடம். அகம்-பாவம். இவர்தல்-ஏறுதல். தூர்-மரத்தின் அடிப்பாகம். ஊழ்தழை-உதிர்ந்த இலை. கீழ்ச்சார் ஊழ் தணந்து-அதோகதியிற் செல்லத்தக்க தீய ஊழ்வினை நீங்கப்பெற்று. ஆரூடர் ஆகி-ஏறியவர்களாகி. ஊழ்தழை என்பன ஊடழை எனவும், ஊழ் தணந்து என்பன ஊடணந்து எனவும், புணர்ந்தமை, கந்தபுராணக் காப்புச் செய்யுளில் "திகழ் தசக்கரம்" என்பன "திகடசக்கரம்" எனப்புணர்ந்தமை போலும்.

௪௫. மாலை-மாலைக்காலம்; இரணியனைக் கொன்ற காலமிது வாதலால் இதனை, உலகோர் இற்றைக்கும் இரணியனேரம் என்கின்றனர். வால் உகிர்-வெள்ளை நகம். அளாவும் திணை-உயர் திணையுமஃறிணையுங் கலந்த திணை; அது விட்டுணுமூர்த்தியினது நரசிம்மரூபம்; அளாவும் என்பது "செய்யுமெனெச்சவீற் றுயிர் மெய் சேறலும்" என்ற நன்னூற் சூத்திரவிதியால் அளாம் என வந்தது. கறை-இரத்தம். வாய்மடுத்தல்-குடித்தல்.

திளைக்குமன் பானுனைப் பூசித்துற் றுன்மால் சிவாலயத்தில்
விளக்குந்து புண்ணியத் தான்மா வலியான வேந்திடைப்போய்க்
களக்குற ளாயேற்று மண்மூ வுலகையுங் காலிரண்டால்
அளக்கும் வலியை யடியேன்றுயர்கெடுத் தாண்டருளே.

---

௪௩. திளைக்குமன்பு-செய்து செய்து பலன் பெற்றதனுற் கைகண்டநுபவித்த அன்பு என்க; திளைத்தல் என்னும் பதம் அநுபவித்தல் என்னும் பொருடருமென்பதை "தாமுத்த வெண் முறுவ லுமையோடாடித் திளைத்தானை" என மதுரைத் தேவா ரத்திலும் "வள்ளியா ரிணைக்களப மணிக்கலச முலைதிளைக்கும் வாகைத் தோளான்" எனவும் "பொருணிலைமை தெளிந்தின்பப் பெருவீட்டிற் பரபோகந் திளைத்து வாழ்வார்" எனவும் காஞ்சிப் புராணம் குமரகோட்டப் படலத்திலும் "விழைந்தான்புரி தவப் பேற்றினை விளைத்தான் களிதிளைத்தான்" எனத் திருவிளையாடற் புராணம் சங்கத்தார் கலகந் தீர்த்தபடலத்திலும் "அளவின் மாயைச்சேற்றிலே யின்னம் வீழ்ந்து திளைக்கவோ சிறியனேனே" எனத் தாயுமானசுவாமி பாடல் ஆசையெனும்-16-லும் வருமாற்று லறிக. உந்துதல்-தூண்டுதல். கள்ளக்குறள் - வஞ்சனையோடுற்ற குறுகிய வடிவம்; அது, விட்டுணுமூர்த்தியினது வாமநாவதாரம் என்றறிக; கள்ளம்களமென இடைக்குறைந்தது, எதுகைநோக்கி. வேதாரணிய சிவாலயத்தில் விளக்குநெய்யை யுண்ணப்புக்கு மூக்குச் சுடுண்ணுதலாற் றூண்டிய எலியானது சிவாநுக்ரஹத் தால் மாவலிச் சக்கரவர்த்தியாயவதரித்தது; அவதரித்த தென்பதை "நிறைமறைக் காடுதன்னி னிண்டெரி தீபந்தன்னைக்- கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட-நிறை கடன் மண்ணும் விண்ணும் நீண்டவானுலகு மெல்லாங்-குறை வறக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்டனுரே" எனத் தேவாரத்திலும் "மெள்ள நறுநெய் விழைந்து விளக்குந்துங்- கள்ளவெலியுங் கடலுலகங் காத்ததே" என விநாயக புராணத்தி லும் "வெண்ணெ யுண்ண வெண்ணுபு வந்து-நந்தா விளக்கை

கணவன்மாற் றுளுதைத் தும்வின வாதவள் கண்மயக்கால்
நணலெணி வீயப்போங் கீர்த்தி கணித னவின்றபடி
பணனுமுன் பூசைமாற் றுளீநீத் தன்புதன் பாற்பதிவைத்
தணவுறப் பெற்று ளடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

மாண்கொள் பிரிய விரதக்கோன் மூத்த மனைவியெனும்
பூண்கொளுங் கீர்த்தி யறுகு சமிகொண்டுன் பூசனைசெய்
தேண்கொளப் பெற்றுள்பெற் றோரை யிகபர வின்பத்துய்க்கும்
ஆண்குழந்தைப்பேறடியேன் றுயர்கெடுத்தாண்டருளே.

---

நுந்துபு பெயர்த்த-தாவுபுல் லெலிக்கு மூவுல காள-நொய்தினி
லளித்த கைவளம் போற்றி" எனப் பட்டினத்தடிகளியற்றிய
கோயினான்மணிமாலையிலும் "சகமதி லெலிதா னன்றோ மாவலி
யாய்த்துத் தானே" எனச் சிவஞானசித்தித் திருவிருத்தத்திலும்
கூறுமாற்றாலறிக.

சஎ. மாற்றுள்-சக்கிழத்தி. கணிதன்-புரோகிதன்; கணிதன்
என்பதும் புரோகிதன்என்பதும் தம்முளொத்த பரியாயநாம
மென்பதை, விநாயகபுராணம் கீர்த்திமகப் பெறு படலம் 12 ற்
புரோகித னெனக்கூறி 15-ல் அக்கணித னெனச் சுட்டிக் காட்டி
யிருப்பதனாலறியலாம். நண்ணல், பண்ணல் என்பவை இடைக்
குறைந்தது எதுகை நோக்கி. நீத்தல்-நீக்குதல். பதி-கணவன்.
அணவுதல் - புல்லுதல்; இதனை "அந்திலாங் கசையி டப்பே
ரணவலே யணுகல் புல்லல்" எனப் பதினொராவது நிகண்டிற்
கூறுதலாலறிக.

சஅ. மாண்-மாட்சிமை; கோன்-அரசன்; பூண்-ஆபரணம்;
சமி-வன்னி; ஏண்-பெருமை.



இருச்சமதன்சொற்படிமாய்ந்தசேய்கையிற்கீர்த்திவன்னி
அருச்சனை யோர்நாட் பலனை யுதவலு மஃதுயிர்பெற்
றருச்செழித்தேர்ந்ததனாற்றெளிவாம்வன்னியுத்தமமுன்
அருச்சனைக்கென்பதடியேன் றுயர்கெடுத்தாண்டருளே.

சமிப்பெண்மந் தாரப் புருடன் புருசுண்டி சாபத்தினாற்
சமியுமந் தாரமு மானார் சவுநகா சானாற் றனைச்
சமியெனவேண்டநம்பூசைக்கவைமேன்மைசார்கவென்றாய்
அமிதத் தயைவைத் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

சேராமற் சாவித் திரியை யயன்மகஞ் செய்யச்சையத்
தூரான்ற தேவரை நீராச் சபித்தன ளும்பர்க்கவர்
தாராங் கனைக டவிர்த்தாருன் றுட்குமந் தாரம்வன்னி
ஆரா தனைசெய் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

௨௯. மாய்ந்தசேய்-இறந்தபிள்ளை; கீர்த்திஎன்பது-பிரியவிரத னென்றஅரசனுடைய மூத்தமனைவியின்பெயர்; ஏர்தல்-எழுதல்.

௩௦. சமிப்பெண்-சமி என்னும் பெயரையுடைய பெண்மகள்; மந்தாரப்புருடன் - மந்தாரனென்னும் பெயரையுடைய ஆண் மகன்; இவ்விருவரும் வதுவும் வரனுமெனவறிக. சமி-வன்னிமரம். மந்தாரம் - மந்தாரமரம். சவுநகாசான் - மந்தாரனுக்குக் குருவா யிருந்த சவுநக முனிவரென்ற ஆசாரியர். சமி என வேண்ட- அவ்விருவர் செய்த குற்றங்களைப் பொறுத்தருள்வாயெனப் பிரார்த்திக்க; சமித்தல்-பொறுத்தல்; இதனை "பொறுத்தலு நடத் தலுஞ் சமித்த லென்ப" எனவரும் பிங்கலந்தைச் சூத்திரத்தா லறிக. மிதம்-அளவு. அமிதம்-அளவின்மை; இது வடமொழி.

௩௧. சாவித்திரி-அயன்மனைவி மூவருளொருத்தி. சையம்- சையபருவதம். ஊர்தல் - செல்லுதல். நீர்ஆக - ஜலரூபமாகும் படிக்கு; ஈண்டு ஆகவென்னும் வினையெச்சத்திறு தொக்கது.

கீர்த்தி மகன்கிப பிரப்பிர சாதன் கிரீவத்திலுன்
மூர்த்தி யணிந்துபா சித்தா யிரமக முற்றிமுந்நீர்ப்
பார்த்திவ மாயிர மாண்டாண் டடைந்தான் பரமபதம்
ஆர்த்த பிறப்பற் றடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

சூரி யகிரணச் சங்கையி லங்கைகொள் சுந்தரமெய்
சாரிகற் சேயைப்பெற் றுன்மா நகராள்வேந் தன்கிருத
வீரிய னேற்றுச்சங் கட்ட சதுர்த்தி விரதத்தினை
ஆரும் வியக்க வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ருங

குட்டி விழிபட் டதனுல்விண் போக்கற்றுக் கூவிழிநா
றிட்டி விமானநோன் பெச்சமுண் டுன்பே ரியம்பணங்கின்
திட்டி படவேர்ந் தபர சதுர்த்தியின் சீர்தெரிந்த
தட்ட திசைக்கு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

தாராங்கனைகள் - மனைவிகளாகிய பெண்கள்; இது வடமொழி.

ருஉ. கிரீவம்-கழுத்து; இது வடமொழி; இதனை "மிதித் தொரு முத்தலை வேல்கிரி வத்திடை வெண்ணுரை கால விறற் கன்னி பதித்து" எனச் சேதுபுராணம் தேவிபுரச் சருக்கம். 64-ல் வருமாற்றானும் அறிக. முந்நீர்ப்பார்த்திவம் - கடல்சூழ்ந்த மண்ணுலகம். பரமபதம்-மோக்ஷம். ஆர்த்த பிறப்பு - பந்தித்த பிறவி; "ஆர்த்த பிறவித்துயர் கெடநா மார்த்தாடுந் தீர்த்தன்" என்றது திருவாசகம்.

ருங. சூரிய கிரணச் சங்கையில்-சூரிய கிரணத்தின் ஆயிரம் என்னும் அளவில். சேயை-கார்த்த வீரியார்ச்சுன னென்னும் பிள்ளையை. மாநகர் என்பது, கிருத வீரியனிருந் தாசுசெய்த நகரின் பெயர்.

ருச. குட்டி-குட்டநோயை யுடையான்; இவ்வாறான பதப் பிரயோகத்தை, விநாயக புராணம், கூச-ஆம்படலம்-கூஅ-சா-ஆஞ்

வினைவரைந் தோம்பிச்சங் கட்ட சதுர்த்தி விரதமிருந்
தினைவரு நின்றூல கைச்சூர சேன னெனுமரசன்
தனைவரை யாத சகத்திர நாம சநபதத்தார்
அனைவரொ டுற்று னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

செய்யுட்களிற் காணலாம். கூ-பூமி; இதனை "கானின்ற தொங்க லாய் காசிபனுர் தந்ததுமுன்-கூநின் றளந்த குறளென்ப" எனத் திருவள்ளுவ மாலையிற் கூறுதலாலுணர்க. நூறு இட்டி-சதக் கிருது என்னும் பெயரையுடைய இந்திரன். நோன்பு எச்சம்-சங்கடசதுர்த்தி விரத நிவேதந சேஷம். திட்டி-கண்; இது த்ருஷ்டி என்னும் வடமொழி. ஏர்தல்-எழுதல்; இதனை "சந்நிதியி லெட்டுறுப்பான் மூன்றுமுறை தாழ்ந்தேர்ந்தான்" எனத் திருவெற்றியூர்ப் புராணத்திற் கூறுதலாலறிக. அபாசதுர்த்தி-அபரபக்ஷ சதுர்த்தியாகிய சங்கட்ட சதுர்த்தி. அட்டதிசை-எட்டுத்திக்கு.

௫௫. வினை வரு ஐந்து ஓம்பி-கருமம் வளர்தற்கேதுவாகிய பஞ்சேந்திரியங்களையும் புறத்து ஏகாமற் பாதுகாத்து என்க; ஈண்டு, வரு என்னும் முற்றுகர வீற்று நிலைமொழி தன்னீறு கெட்டு ஐந்தென்னும் வருமொழியோடும் புணர்ந்து, வரைந்து என்று ஆனமைக்கு, நன்னூற் சூத்திரம் 164-ல் "முற்றுமற் றொரோவழி" என்ற இலக்கண விதியே போதியதேனும், தேவைத்திரிபந்தாதியில் "நீள் தரு அங்கம் திகழ் மொய்ம்பினர்-நீடரங்கந் திகழ் மொய்ம்பினர்" எனவும் "சொல்ல வரு என்று முன்-சொல்லவரென்று முன்" எனவும் வந்துள்ள இலக்கிய வமைதியையுந் தழுவிக்கொள்க. இனைவு அரும்-துன்பம் அற்ற. தனைவரையாத - தன்னை விட்டு நீங்காத. வரைதல் - நீங்குதல்; இதனை "வரைதலே கொள்ள னீக்கல்" எனச் சூடாமணி நிகண்டில் வருமாற்றுலறிக. சகத்திர நாம சநபதம் - சகத்திரபுரி என்னும் பெயரையுடைய நகரம்.

துமாநிழல் போற்றீ வினைசூழ நோயிற் சுழல்வணிகப்
புமானின்கணஞ்சொல்கணபதிப்பேர்மூன்றட்புக்கவுடன்
விமானத்துற்றுன்சுசிமேய்ச்சூரசேனவேந்தோடுன்னுல
கமானச்சீர்த்துன்பேரடியேன்றுயர்கெடுத்தாண்டருளே.

சாசி ருகத்தைவா டாமையின் வென்றநின் றுளேப்பத்தி
புரசர மாகப்பூ சித்தா றெழுத்தெணிப் போற்றியதாற்
பரசுரா மன்பெற் றனன்சிரஞ் சீவிப் பதவியொடும்
அரசரை வேற லடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ருஎ

---

ருசு. தும்மா நிழல் போல்-உடம்பை விட்டகலாத அதனது சாயையைப்போல; தும்மா என்ற எதிர்மறைப் பெயரெச்சம் துமா என இடைக்குறைந்தது; தும்முதல்-விடுதல்; இதனை "செம்மணியெண் ணிறந்தபல செறியக்கால் யாத்தொளியே-தும்மவமைசூழ்நொச்சி சூரியமண் டலமேயோ" என்ற திரு நாகைக் காரோணப் புராணச் செய்யுளிற் காண்க; தீவினை, நிழலைப் போன்று செய்தோனை விடாமையை "தீயவை செய்தார் கெடுத னிழறன்னை-வீயா தடியுறைந்தற்று" என்னுந் திருக்குற ளுணர்த் தும். புமான்-ஆண்மகன். அள்-செவி; இதனை "காது கேள்வி யள்ளே சுருதி, கன்னஞ் செவியே சோத்திர மாகும்" என்ற பிங்கலந்தைச் சூத்திரத்தாலுணர்க. சுசி-பரிசுத்தம். உன்பேர் அமானச் சீர்த்து-உன்னுடைய திருநாமம் அளவற்ற சிறப்பினை யுடையது; அமானம் - அளவற்றது; இது வடமொழி.

ருஎ. சாசிருகம் - தாமரைப்பூ. பத்தி புரசரம் ஆக-அன்பை முன்னிட்டுக்கொண்டு; இவை வடமொழி. ஆறெழுத்து-விநாயக ஷடாக்ஷர மந்திரம்.

ஏற்கச் சுரர்கயி லேச்சிவ லிங்க மிராவணன்பெற் [றில்
றூர்க்குச்செல்கின்ற ஞூறுய்த்தோம்பெனக்கம்பத்தோன்வயிற்
நீர்க்கொள்வித் தலைதை வலிந்து தரச்செய்தாய் நின்யுத்திமற்
றூர்க்கும் வராஅ தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

கோகன்ன மென்னுந் தலத்தி லிராவணன் கொண்டுவந்த
பாகன்ன சொல்லுமை பங்கன் குறியைப் பதித்திருபான்
வாகன் னவனைப்பந் தாடி யழவிட்ட மாபலனே
ஆகென்னும் வாக வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

ருஅ. சுரர் ஊறு உய்த்து ஒம்பு என ஏற்க-தேவர்கள் அவ் விராவணனுக்கு விக்கினத்தைப் புகுவித்து எங்களைக் காப்பாற் றென்று யாசித்து வேண்ட. கம் பத்தோன்-பத்துத் தலையை யுடைய இராவணன். யுத்தி (இதற்கு இது செய்யின் ஒப்பமுடியு மென்றெண்ணிச் செய்யுந்) தந்திரம். வராது என்பது, வராஅது என அளபெடுத்தது; "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள்" எனத் திருக்குறளில் அளபெடுத்தாற் போல.

ருகூ. கோகன்னம் என்னும் தலம்-திருக்கோகாணமென்னுஞ் சிவக்ஷேத்திரம். பாகு அன்ன சொல் உமை பங்கன் குறியைப் பதித்து-வெல்லப்பாகை யொத்த சொல்லையுடைய பார்வதி பாகனது குறியாகிய இலிங்கத்தைப் பிரதிஷ்டித்து. இருபான் வாகு அன்னவனைப் பந்தாடி அழவிட்ட மாபலனே-இருபது தோள்களையுடைய அவ்விராவணனைக் கையாலெடுத்துப் பந்தாடி அவன் பொறுக்கமாட்டாம லழுது வேண்டுதலும் மன்னித்து விட்டருளிய மாபலனென்னும் பெயரையுடையவனே; மாபலன் என்பது, விநாயக சகத்திரநாமத்துள் ஒன்று. பந்தாடி விட்டமையை "சட்டவல் லரக்கன் றன்னைத் தடங்கைப்பந்தாடி னனே" எனவும் "இடையுட லொழியா வண்ண மெம்பிரா னுய்ய விட்டான்" எனவும் விநாயகபுராணத்திற் கூறுமாற்றாலறிவதோடு

மண்ணி லிராவணன் கைச்சிவ கோசநீ வாங்கிவைத்த
தெண்ணியுன்னோர்தலைக்குட்டவவனையீரைந்துதலை [ளம்
புண்ணுறக்குட்டிக்கொள்வித்தீதென்முன்செய்வோர்பொம்மல்வ
அண்ணுவ ரென்று யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
சு௦

இந்திரன் பூசித்து நீரிலை நந்தனக் கீதியென
விந்த மடக்கிகைக் குண்டிகை நீரைநீ வீழ்த்திப்பொன்னி
உந்தி யெனப்புக வுய்த்தனை மூழ்கி யுலகுமுய்ந்த
தந்தன் னளியுய்த் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

"முன்னமே மா ராக்கனைப் பந்தாடி விட்டதும்" எனச் சிவஞான சுவாமிகள் பிரபந்தத்திரட்டிற் செங்கழுநீர்ப்பிள்ளையார் பிள்ளைத்தமிழிற் கூறியதூஉம் காண்க. ஆகு - பெருச்சாளி. வாகம்-வாகனம்; இதனை "முன்னுருவந் தனைமாற்றி முகில்வாகன் றிருமதலை மோகியாகி" எனப் பாரதம் அர்ச்சுனன் றீர்த்த யாத்திரைச் சருக்கம் 27-ற் கூறுதலாலறிக.

சு௦. மண்ணில்-பூமியின் கண்ணே. சிவகோசம்-சிவலிங்கம். ஈது - குட்டிக்கொள்ளுதலாகிய இவ்வழிபாட்டை. பொம்மல் வளம் - பொலிவாகிய அஷ்டைசுவரியங்களையும். அண்ணுவர் - அடைவார்கள்.

சுக. நந்தனம்-நந்தவனம்; நந்தனத்துக்கு என்பது, அத்துச் சாரியை பெருமல் நந்தனக்கு என வந்தது; "நலக்குரியார் யாரெனில்" எனவும் "தோற்ற நிலக்குப் பொறை" எனவும் திருக்குறளில் வந்தாற்போல. விந்தம் அடக்கி-விந்தமலையைப் பூமிக்குள் அமிழ்த்தி யடக்கினவராகிய அகத்திய முனிவர். குண்டிகை-ஜலபாத்திரம். பொன்னியுந்தி-காவேரிநதி.

செட்டிசீ டன்கர கஞ்சாய்த்து வேதச் சிறுனுமுனேக்
குட்ட வரமா முகனுனுய் கண்டவன்குட்டிக்கொண்டான்
இட்ட நமக்கிது நில்லென்று பல்வர மீந்தனையால்
அட்ட குணத்த வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

கூஉ. செட்டி சீடன்-சுப்பிரமணியக் கடவுளது மாணுக்கராகிய அகத்திய முனிவர்; அக்கடவுளுக்குச் செட்டி என்று ஒரு பெயருண்டென்பதை "செட்டி வாணிகன் செவ்வேளாம்" எனப் பதினோராவது நிகண்டுட் கூறுமாற்றுலறிக. காகம்-உண்டை வடிவினதாகிய ஜலபாத்திரம். வேதச் சிறுனும் உனே-காகத்தைச் சாய்த்துப் போட்டு அக்கணமே பிராமணப் பிரமசாரியுருக்கொண்டு நின்ற உன்னே. குட்ட வர-கையை ஓங்கிக்கொண்டு உன் தலையிற் குட்டுதற்காக வந்தவுடனே. மாமுகன் ஆனுய்-யானேமுகனுய் நின்ருய். கண்டு அவன் குட்டிக்கொண்டான்-யானேமுகனுய் நின்றதைக் கண்டதும் அவ்வகத்தியமுனிவர் குட்டவெடுத்த தம்முடைய கையாலேயே தம்முடைய தலையிற் குட்டிக்கொண்டார். குட்டிக்கொண்ட அகத்திய முனிவரைப் பார்த்து இப்பணிவிடை நமக்கு விருப்பமுடையதாயிற்று, போதும்போதும் நிறுத்து என்று விநாயகப் பெருமான் றிருவாய்மலர்ந்ததை "குட்ட வோங்குதன் காங்களேக் கொண்டுதன் முடியில்-அட்டு சோரியிற் சேப்புற வழுந்துறப் புடைப்ப-முட்டிலாதமெய்யன் புடை முனிவனே நோக்கி-இட்ட மாயதிச் செயலினி நில்லென்ருனிறைவன்" என்ற விநாயக புராணச் செய்யுளாலறிக. அட்ட குணம்-தன் வயத்தனுதன் முதலிய எண் குணங்கள்; இவற்றின் விவரணத்தை, காஞ்சிப்புராணம் கச்சிமயானப் படலத்தில் "முடிவி லாற்றலே தன்வ யத்தினே முற்று ணர்ச்சியை பேருண்-மடிவி லாட்சியை தூய மேனியை மற்றி யற்கை யுணர்ச்சியை-படியி லாவியல் பாகநீங்கிய பாச நோயை வரம்பிலின்-புடையை யுன்னடி யேங்க ளென்று முனக்க டைக்கல மையனே" என்று ஒரு செய்யுளில் எட்டையும் அடக்கிக் கூறியிருக்குமாற்றுலறிக.

காசிபர் முன்னோர் துவாதச நாம கரணமிட்டுப்
பூசை செயப்பல் வரமுமீந் தாயெற்குப் புத்திரனாய்
வாசுமு காவென்று காசிபர் வேண்ட வழங்கினையவ்
வாசில் வரமு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. சுஎ

### விநாயகருக்கு முக்கியமாயுள்ள பன்னிரண்டு திருப்பெயர்கள்.

தணார்பால சந்திரர் லம்போ தரர்விக டர்கபிலர்
கணாத்தியக் கர்தூம கேதேக தந்தர் கசகன்னரே
கணாதிபர் விக்கிந ராசர் சுமுகர் கசாநனரென்
றணாறிரு நாம வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

### விநாயக சகத்திரநாம மகிமை.

நோயினை நீக்கு மிகபர போக நுகருவிக்கும்
ஈயும் பரம பதத்தை யிசைவிக்கு மெண்டிருவைப்
பாயிரத் தோடுன தாற்றலைத் தேற்றும்பா ராயணர்க்குன்
ஆயிர நாம மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. சுரு.

---

சுஎ. காசிபர் முன்னோர் - காசிப முனிவர் முதலானோர். துவாதச நாமம் - பன்னிரண்டு திருப்பெயர்கள்; அவைகளை, அடுத்த செய்யுளிற் காண்க.

சுச. தண்-குளிர்ச்சி; அண்-பொருந்திய; இவ்விரண்டிலும் ணகரமெய் யிரட்டிக்காமை, எதுகை நோக்கி. ஆறிரு நாமம்-(கற்பாரம்பத்திற் காசிப முனிவர்பால் இருபத்தொரு சருக்கமாய்த் தோன்றிய சராசரங்களாற் பூசித்து இடப்பெற்றனவும், தம்மை யொருகாலோதின மாத்திரத்தில் சகத்திரநாம பாராயண பலனைத் தரத்தக்கனவு மான விநாயகப் பெருமானுடைய) பன்னிரண்டு திருப்பெயர்கள்.

சுரு. பரமபதம் - மோக்ஷம். எண்திரு - அஷ்டலக்ஷ்மி. பாயிரம்-வரலாறு. பாராயணர்-படிப்பவர். ஆயிரநாமம்-சகத்திரநாமாவளி.

இதுமுதல் 31-செய்யுட்கள், விநாயக புராணத்திலுள்ள இலீலா காண்டக் கதைகளைச் சுருக்கி யமைக்கப் பெற்றன.

முதலவதாரம்.

மூவ ருலகிற்கு முத்தொழில் செய்யு முறைமையென
மூவர்க்கு முத்தொழி னீசெய்வை யென்னு மொழிவிளங்க
மூவரை வக்கிர துண்டனென் றுற்று முகிழ்த்தன்முத
லரவது லீலை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௬௬.

வாக்குமனமுடல்பாழிற்செலாதுன்பான்மன்னச்செய்து
சீக்கு முதலிய வற்றலாம் வக்கிரந் தீர்த்தெனைக்கை
தூக்கிப்புரக்கும்பொறுப்புன்னதேவக்ரதுண்டனெனும்
ஆக்கு வயனி யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௬௭.

---

௬௬. மூவர்களும் உலகத்தார்க்கு முத்தொழிலைச் செய்யுமாறு போல, அந்த மூவர்களுக்கும் விநாயகப்பெருமான் முத்தொழில் செய்வரென்பதை "மூவர்க ளுலகத் தார்க்கு முத்தொழில் புரியுமாபோல்-மூவர்க டமக்குத் தானே முத்தொழில் புரியா நின்ற-மூவர்கண் முதல்வனென முதலிலா முதல்வன்" என விநாயகபுராணம் முக்கலர்தக்கனுக்குபதேசித்தபடலம்-18-ற்கூறு மாற்றாலறிக. முகிழ்த்தல்-தோற்றுவித்தல். லீலை-விளையாட்டு. விநாயகப் பெருமானுடைய திருவவதாரம் பன்னிரண்டனுள், வக்கிரதுண்டாவதாரம் முதலாவதாகும்.

௬௭. பாழ்-கெடுதி. சீக்கு-பிணி. வக்கிரதுண்டன்-மாறுபாடுகளைவெட்டியொழிப்பவன்; இப்பெயர், விநாயகப்பெருமானுக்குத் துவாதசாவதாரத்துண் முதலவதாரப்பெயராயும் சோடசநாமத்துளொன்றாயுமுள்ளது. ஆக்குவயம்-பெயர்; இதனை "அபிதானமாக்குவயநாமமும்பெயரே" என்றபிங்கலந்தைச்சூத்திரத்தாலறிக.

## இரண்டாம் அவதாரம்.

தாட்டுணைபோற்றிக்கணன்வலிதிற்கொள்சிந்தாமணியை
மீட்டுத் தருகென வேண்டக் கபிலர்செய் வேள்வியிடைச்
சேட்டுச் சுமுக னெனவந் தவனைச் செகுத்தஃதுத
வாட்டிரண் டாவ தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

பார்வதி முன்னுங் கபிலர் மகத்தினும் பாவையுரு
ஆவதருணன்பதியூழ்கூட்டப்பெண்ணவாய்ப்பின்புசேர்
தேவரைப் போல்வேனன் றென்றோர்ப்பிக் கப்புத்திசித்தியொடும்
ஆவிர்ப் பவித்தா யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

சுஅ. கணன்-அபிசித்தென்னும் அரசனுக்கு மகனாய் அசுர குணம்வாய்ந்த ஓரரசன். கபிலர்-கபில முனிவர். சேடு-பெருமை. சுமுகனென்பது, கபிலாச்சிரமத்தில் வேள்வியிற்றோன்றிய நராவயவங்கட்கொத்த நரமுகத்தோடு வருதலால் விநாயகப் பெருமானுக்கு ஆங்கு இட்ட பெயர்; கபில முனிவரது தவத்திற் கிரங்கி யவதரித்தமைபற்றி, கபிலர் என்றும் பெயர். அம் முனிவருக்குச் சிந்தாமணியை மீட்டுக்கொடுத்தமையாற் சிந்தா மணிவிநாயகர் என்றும் பெயர். செகுத்தல்-அழித்தல். அஃது-அச்சிந்தாமணியை. உதவு-உதவிய. ஆட்டு-விளையாட்டு.

சுக. இதன்பொருள்-பார்வதி தேவியினது அபிமுகத்தின் கண்ணும் கபிலமுனிவர் வேட்ட யாகாக்கினியின் கண்ணும் சித்தி புத்தியென்னுமுனது திருவருட்சத்திகளின் ஸமேதனாகத் திரு வவதாரஞ் செய்தாய் (பிறக்கும்போதே பத்நிஸமேதராய்ப் பிறந்தவர்களை எவ்வுலகத்திலும் கண்டதுமில்லை கேட்டதுமில்லை, அப்படியிருக்க, நீ மட்டும் பத்நிகளோடவதரித்த காரண மென்னை யெனில்) பெண்ணுருக் கொண்டு எனதிருபாங்கினும் அமர்ந்திருப்ப தெனது திருவருளேயாம், அவ்வருளையுடைய பதி நான், ஊழ்வினையானது சேர்க்க அந்நிய சீவன் கொண்ட

மூன்றும் அவதாரம்.

தானைச்சிந் தூரற் கொலக்கொண்மூன் றுமவ தாரத்திலே
ஞானச் சொரூப னெனுநீ கசாநந நாமமுற்றாய் [ண்ட
தோனத்திப் போர்த்தவன் கைத்துற் குரித்தென ரேன்றக்கொ
ஆனைத் தலையா லடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. எ௦.

போற்றப் புவனங் கசாநன னாகநீ போந்ததுனக்
கேற்ற முமைக்குத் தலைமக னீதலை யின்மகனாய்த்
தோற்றி யிருந்தில் செவிக்கேட் டிலாநாவாற் சொன்னதெங்கட்
காற்ற வியப்பிற் றடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

பெண்ணுருவைக் காம விகாரத்தால் விரும்பி, பிறந்து யவ்வன முற்ற பின்பு, தம்பதிகளாய்ச் சேர்கின்ற தேவர் முதலிய சீவர்களைப்போல்பவனன்றென்னும் உண்மையை அனைவர்க்குந் தெரிவிக்கும் பொருட்டேயாம் என்க. பார்வதியின் முன்பாகப் பத்தினி ஸமேதராயவதரித்ததை விநாயக புராணம் கெசாநனர் திருவவதாரப்படலம் 106-ஆவது செய்யுளிலும், கபிலமுனிவாது யாகாக்கினியிலவதரித்ததை விநாயக புராணம் சிந்தாமணி விநாயகர் திருவவதாரப்படலம் 111-ஆவது செய்யுளிலுங் கூறுமாற்றாலறிக. பாவை-பெண்; இது உவமையாகு பெயர். ஆவிர்ப்பவித்தல்-தோன்றுதல்; இது வடமொழி.

எ௦. தானைச்சிந்தூரன்-சேனைகளையுடைய சிந்தூரனென்னும் பெயரைத்தரித்த ஓரசுரன். நத்தித் தோல் போர்த்தவன் கைத்து உற்கு உரித்தெனல் தோன்றக்கொண்ட ஆனைத் தலையால்-விரும்பி யானைத்தோலைப் போர்த்த சிவபெருமானது கையின்கணுள்ளது. வீமந்த புத்திரனாகிய உனக்கே பாத்தியமுள்ள தென்னுஞ்சொல் எல்லாவுலகத்திலும் விளங்கும்படி நீ அப்பெருமானது கையினின்றுமெடுத்து வைத்துக்கொண்ட ஆனைத்தலையினால். என்க.

எக. புவனம்-உலகம். உமைக்குத் தலைமகன் நீ தலை இல் மகனாய்த் தோற்றி இருந்து இல் செவிக்கேட்டு இல்லா நாவாற்

நான்காம் அவதாரம்.

பார்சுவர் பால்விக் கிநராச னென்னப் பவித்துமறை
சார்சிரௌ தம்புரி மேல்வள ரக்கந் தருவமன்னூர்
ஏர்செயு மாகூர்ந் திருபணி விக்கினற் கீந்தநுநான்
கார்சுப லீலை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. எஉ.

ஏரி கரைநின் றனைப்பார் சுவர்கொணர்ந் தியவில்லாள்
வாரி யிடுக்கிமுத் திட்டூட் டினள்பான் மகன்மைகொளவ்
வீரிய வச்சலை செய்தவம் யாதவள் வெற்புதித்த
ஆரியை போன்று ளடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

சொன்னது எங்கட்கு ஆற்ற வியப்பிற்று-உமாதேவிக்குத் தலைப் பிள்ளையாகிய நீ தலையில்லாப் பிள்ளையாய்ப் பிறந்து உட்கார்ந் திருந்து செவிக்கருவி யில்லாதிருந்துந் தேவ ஸமூகமுறை யீட்டைக்கேட்டு நாக்கருவி யில்லாதிருந்தும் பதிற்சொன்ன தானது,எங்களுக்கு மிக்க ஆச்சரியத்தைத் தரத்தக்கதாகும் என்க.

எஉ. பார்சுவர்-பார்சுவ முனிவர். ப வி த் து-திருவவதாரஞ் செய்து. சிரௌதம்-வைதிகக் கிரியை. கந்தருவ மன் ஆம் ஆகு ஊர்ந்து-கிரவுஞ்ச னென்னுங் கந்தர்வ ராஜனாகிய பெருச்சாளி வாகனத்தைச் செலுத்தி. விக்கின னென்பவனுக் கீந்த இருபணி யாவையெனில், கடவுட்பத்தி யுடையார்க்கு விக்கினஞ் செய்யா மையும் அஃதில்லார்க்கு அதனைச் செய்தலுமாகிய இரண்டுமாம்.

எஙு. ஏரிகரை-குளக்கரை; இப்பதங்கள் வன்மைமிகாதியல் பாய்ப் புணருமென்பதனை, நன்னூலில் "இயல்பினும் விதியினும்" என்ற-165-ஆம் சூத்திரவுரையிற் காண்க. இல்லாள்-அம்முனிவ ருடைய பத்தினியார். வாரி-ஆவலோடு கொண்டு. இடுக்கி-கக்கத்தி லணைத்து. முத்து இட்டு-முத்தங் கொஞ்சி. பால் ஊட்டினள்-முலைப்பாலருந்துவித்தாள். மகன்மை கொள் அவ் வீரியவச்சலை செய்தவம் யாது?—நீ மகனுந்தன்மையைப் பெற்றுக்கொண்ட

விக்கிநந் தன்னைத் தொழார்தமக் காக்கிச்சே விப்பவர்க்கு
விக்கிநந் தன்னைநீ போக்கு மிருவிதத் திற்குமொப்ப
விக்கிந ராச னெனவுனை விள்ளுவர் மேலவரும்
அக்கலை தாமு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. எச.

சிந்துவுட் சங்கன் மறைகவர்ந் துற்றுன் செகத்திற்கலைத்
தந்தரு ளென்றயன் விக்கிந ராசாவ தாரத்துனை
வந்தனை செய்ய மயூரேச னுகி வழங்கினையால்
அந்தமெய்க்கோச மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

அந்தப் பார்சுவமுனி பத்தினியாகிய வீரியவச்சலையென்னும் பெயரையுடையாள் பூர்வத்திற் செய்த தவமானது எப்படிப்பட்ட மேன்மையை யுடையது? அவள் வெற்பு உதித்த ஆரியை போன்றுள்—அச்சீமாட்டி உன்னை மகவாகக்கொண்டு பாராட்டிய தொழிலுவமையினுலே பொன்மலைப்பிறந்த பார்வதியை ஒத்தாள். ஆரியை-பார்வதி.

எச. விக்கிநம்-இடையூறு. இரு விதத்திற்கும் ஒப்ப-ஆக்குதலும் போக்குதலுமாகிய இரண்டு விதப் பொருளுரைத்தற்கும் பொருந்தும்படி. அக் கலை-அம்மேலவராற் பாராட்டப்பட்ட சாத்திரங்கள். விநாயகப் பெருமான் தம்மைத் தொழாதவர்கட்கு விக்கினத்தை ஆக்கவும், தொழுதவர்கட்குப் போக்கவுஞ் செய்வ ரென்பதை "நின்னை யாவர்க ணினைந்தடி வணங்குகின்றூர்கள்-அன்னர் பாவிடை யூறுக ளனைத்தையு மறுத்து-மன்னு காமங்க ளனைத்தையும் வழங்குக விரைவின்" எனவும் "யாவராயினு நின்னை வணங்குறூர்க் கிடர்களே புரிக" எனவும் விநாயக புராணம் கணபதி திருவவதாரப்படலம் 40-41-ல் விநாயகாபிமுக சிவப் புரோக்தமாகக் கூறியிருத்தலாலறிக.

எரு. சிந்து-சமுத்திரம். சங்கன்-சங்காசுரன். மறை-வேத புத்தகம். அயன்-பிரமா. மெய்க்கோசம்-உண்மை நூற் புத்தகம்.

## ஐந்தாம் அவதாரம்.

இந்து நிறஞ்சட் புயமுக்கண் மேயுமைக் கெச்சமென
வந்து மயூரேச ளுகிச் சுரர்சிறை மாற்றிமறச்
சிந்துவைச் சிந்திச் சிகிகுகற் கீந்து செகம்புரந்த
வைந்தாங் கிரீடை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

எசு

## விநாயக கவச வரலாறு.

தவசங்கத் தார்க்கு மரீசி முனியிது தன்னைமுக்காற்
றிவசந் தொறுந்துதித் தாலிடர் தீரு மெனச்செப்புநின்
கவசந் தருந்துதிப் பார்க்கின் பொடுதிட காத்திரத்தை
அவசந் தணப்பித் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

எசு. இந்து நிறம்-சந்திரன்போன்ற வெள்ளை நிறம். சட்புயம்-ஆறு தோள்கள். உமைக்கு எச்சம் என வந்து-உமையம்மைக்குப் பிள்ளையென்னும்படி அவதரித்து. சிறை-சிறைச்சாலையென்கிற காவற்கூடம். மறச் சிந்துவைச் சிந்தி-கொடுந்தொழிலையுடைய சிந்துவென்ற அசுரனைக் கொன்று. சிகி குகற்கு ஈந்து-அச்சிந்துவென்னும் அசுரனோடு போர் செய்யும்போதேறி நடாத்திய மயில் வாகனத்தை முருகக் கடவுளுக்குக் கொடுத்து. செகம் புரந்தது ஐந்து ஆம் கிரீடை-உலகத்தை இரக்ஷித்ததானது, ஐந்தாமவதாரத்திற் செய்த திருவிளையாட்டாகும் என்க. கிரீடை-விளையாட்டு.

எஎ. தவ சங்கத்தார் - முனிக் கூட்டத்தார்கள். திவசந் தொறும்-தினந்தோறும். முக்கால்-மூன்று தரம். அவசம்-பிரக்ஞையின்மையாகிய தன்வசமழிகை. தணப்பித்து-நீக்கி.

## ஆறும் அவதாரம்.

வன்னி யசுரனைக் கொன்றெமைக் காவென வானரையர்
வன்னியுருக்கொடு வந்துண் டவனைத்தூர் வைப்பெருமை
தன்னையர்ச் சித்தவர்க் குத்தெரித் துப்பால சந்திரனும்
அன்னதா றுமாட் டடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

ஒன்பான் கிரகத்தின் பீடை தணித்திடு முட்டணநோய்த்
துன்பாதி தீர்க்குந் திடவுட லாக்குஞ் சுகம்பெருக்கும்
உன்பால சந்திரப் பேர்த்திரு மந்திர மோங்குழுவ
லன்பாற் செபிப்பார்க் கடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

## ஏழாம் அவதாரம்.

கோமக ளான சுமுதைசெய் நோன்பிற் கொடுத்துவரம்
நீமக னுப்வந் தவட்கிடர் செய்ய நினைந்தமர்த்த
தூமனைக் கொன்றத னற்றாம கேதுப்பேர் சூடியதே
மூாமுன தாட லடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௮௦

---

எ௮. வன்னியசுரன்-அநலாசுரன்; இவ்வன்னிப் பெயர்க்கு, அக்கினியென்பது பொருள். வானர்-தேவர்கள். ஐயர்-முனிவர்கள். வன்னி யுருக்கொடு வந்து - பிரமசாரி வடிவங் கொண்டு தோன்றி; இவ் வன்னிப் பெயர்க்கு, பிரமசாரியென்பது பொருள். தூர்வை-அறுகம்புல். பாலசந்திரன் ஆம் அன்னது ஆறு ஆம் ஆட்டு - பாலசந்திரனென்ற பெயரோடு தோன்றிய அந்தத் திருவவதாரமானது, ஆறுவது திருவிளையாடலாகும் என்க.

எகூ. ஒன்பான் கிரகத்தின் பீடை-நவக்ரஹ தோஷம். உட்டண நோய்-சுரவியாதி. உழுவலன்பு-விடாது தொடர்ந்த அன்பு. செபிப்பார்க்கு-செபஞ் செய்பவர்களுக்கு.

௮௦. கோமகள் ஆன சுமுதை-ராஜபுத்திரியாகிய சுமுதை என்னும் பெயரை யுடையவள். அமர்த்த தூமனை-போர் செய்த

### எட்டாம் அவதாரம்.

சுட்டுப் புரத்தை யனைத்துல கிற்குஞ் சுகங்கொடுக்கச்
சிட்டன் கயிலை மகேச்சுர னுன்னைத் தியானித்தபோ
திட்டந் தரவா நனத்திற் கணேசனென் றெய்தியதுன்
அட்டக லீலை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. அக.

### ஒன்பதாம் அவதாரம்.

கரிபிடி யாமீச னீசை கலப்பிற் கணபதியாய்க்
கரிமுகத் துற்றுக்கயாசுரனைக்கொன் றுகண்ணற்குப்போய்க்
கரிசொன்ன தற்கா வுமையிடு சாபங் கழற்றலொன்பான்
அரிய விநோத மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

தூமனென்னும் பெயருடையானை. தூமகேதுப் பேர் சூடியது உனது ஏழாம் ஆடல்-புகையை உயிர்த்துக் கொன்று அதனுல் வெற்றிக் கொடியை நாட்டிய காரணத்தாற் றூமகேது வென்னுங் காரணப் பெயரைத் தரித்த அவதாரமானது, உன்னுடைய ஏழாவது திருவிளையாடலாகும் என்க.

அக. புரத்தைச் சுட்டு - திரிபுரத்தைத் தஹநஞ் செய்து. சிட்டன் - பி ர தா ன மா ன வ ன்; இதனை "சிட்டன் சேவடி கைதொழச் செல்லுமச், சிட்டர்பாலணு கான்செறுகாலனே" எனக் கோயிற் றேவாரத்திற் கூறுமாற்றாலறிக. இட்டம்-மனோ பீஷ்டத்தை. ஆநனத்தில்-அம் மகேச்சுரப் பெருமானது திரு முகத்தில். கணேசன் என்று எய்தியது உன் அட்டக லீலை- கணேச னென்ற பெயரோடு வந்த திருவவதாரமானது, உன் னுடைய எட்டாவது திருவிளையாடலாகும் என்க.

அஉ. இதன் பொருள்-ஆண் யானை வடிவமும் பெண் யானை வடிவமுங் கொண்டவர்களாகிய சிவபிரானும் உமாதேவியு மென்னுமிருவர்களது சார்வறச் சார்ந்த கலவியின்கண்ணே,

கணபதியென்னும் பெயரைப்பூண்டு யானைமுகத்தோடு தோன்றி, உலகிற் கிடர்செய்த கஜமுகாசுரனைக் கொன்று, பொய்ச் சாக்ஷி சொன்னதற்காக உமையம்மை யிட்ட சாபத்தைத் திருமாலுக் ககற்றியருளிய திருவவதாரமானது, உனது ஒன்பதாவது அருமைதங்கிய திருவிளையாடலாகு மென்க. கரி-சாக்ஷி. கண்ணன் - திருமால். கழற்றல் - கழலச் செய்தல். ஒன்பான் - ஒன்பது. ஈசனீசை கலப்பு, சார்வறச் சார்ந்த தன்மைத் தாதலை "அடுக்கலுக் கரையன்-றனையை யாகிய வுமையொடுஞ் சார்வறச் சார்ந்து-வினையு மாமதிக் கண்ணியான் வதிந்தருளினனால்" என விநாயக புராணம் கணபதி திருவவதாரப் படலம்-14-ற் கூறுமாற் றலறிக. அந்தத் திருவருட் கலப்பிற் கணபதி தோன்றினமையை "பிடியத னுருவுமை கொளமிகு கரியது-வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்-கடிகண பதிவர வருளினன் மிகுகொடை-வடி வினர் பயில்வலி வலமுறை யிறையே" எனத் தேவாரத்திலும் "களிற்றினை யந்த-அடிக ளேக்கிரின் றனருளத் தார்வமோ டம்மை-பிடியை நோக்கிரின் றனளவை பேணிய கலவி-முடிவின் மேதகத் தோன்றினர் மொய்விநா யகரே" என விநாயக புராணத் திலும் "மும்முறை முதலெலா மீன்றிடு மிருமுது குரவான-இம்மனுக் கரியொடும் பிடியெனத் தோன்றவி னிவைகளாகி-அம்மநாம் புணர்துமென் றவ்வுருக் கொண்டன ராடு காலைச்-சும்மைநீ ருலகெலா முய்யவந் துதித்தனன் றோன்ற லன்றே" எனக் காஞ்சிப்புராணத்திலும் "பூணிக்கு மாசையின்மாப் பிடியைத் தந்தி பொருந்துதல்கண் டவ்விறைவ னிறைவி யோடும்-பாணிக்கு மவ்வுருவாய்க் கூடிவேழப் பனைக்கைமுக விநாயகனை நல்கி னனே" எனக் கடம்பவன புராணத்திலும் "இனைய தன்மையா யிருவரும் புணர்ந்தினி திருப்பேம்-வனைமலர்க்குழால் வருதியென் றும்பன்மா முகத்த-தனைநிகர்ப்பரு பிரணவ வுருவ மாய்ச் சமைந்தே-அனைய காலையிற் சம்பவித் திருந்தன னதனால்" "அண்ணல் யானைமா முகத்துட னொருசுத னகிலம்-விண்ணம்

உக்கி என்னும்
தோப்புக்கர்ன வரலாறு.

குட்டி யிருகையாற் காதைமா றப்பற்றிக் குந்திநிலத்
தொட்டாதெழலுக்கிதோப்புக்கனமென்பரும்பர்செய்து
பெட்டீதுன்முன்புரிவார்வேட்டதீகெனப்பேரின்பைத்துன்
பட்டீவ னென்றா யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

அ௯

---

பாதலந் துதித்திட வுதித்தனன்'' எனத் திருவேற்காட்டுப் புராணத்திலும் கூறுமாற்றாலறிக.

அ௯. காதை மாறப் பற்றி-வலக்காதினை இடக்கையினலும் இடக்காதினை வலக்கையினலும் பாகாங்க வித்யாசமாக மாறும்படி பிடித்துக்கொண்டு. நிலத்து ஒட்டாது குந்தி எழல்-பூமியிற் பரிசப்பட்டுவிடாமலுட்கார்ந் தெழும்புதலே. உம்பர்-தேவர்கள். பெட்டு ஈது உன்முன் புரிவார் வேட்டது ஈகென-விரும்பி இவ்வாறன தோப்புக் கர்னத்தை உனது சந்நிதியிற் செய்பவர்களுக்கு அவர்கள் விரும்பியதைக் கொடுத்தருள வேண்டுமென்று அத்தேவர்கள் வேண்டிக்கொள்ள. துன்பு அட்டுப் பேரின்பை ஈவன் என்றாய் - தோப்புக்கர்னம் போடுவோரது துன்பத்தைக் கெடுத்து மேலும் அவர்கட்கு மிக்க இன்பத்தைக் கொடுப்பேனென்று வரங்கொடுத்தாய் என்க. உக்கி என்பது, பாண்டிதேச வழக்கச் சொல்; தோப்புக்கர்னம் என்பது, சோழதேச முதலிய பல தேச வழக்கச்சொல். குந்தி என்ற பதம் உட்கார்ந்து என்ற பொருடருமென்பதை ''மீக்குந்தி யுறிகடோறும் வெண்ணெயுந் தயிரு முண்ட வாக்குந்தி மலரோன்'' என வில்லிபுத்தூரர் பாரதத்தில் வருமாற்றாலறிக.

## பத்தாம் அவதாரம்.

வான்றங் கதிதி கசியபர் மாட்டு மகோற்கடனுய்த்
தோன்றி நராந்தகன் றேவாந் தகனைத் தொலைத்துநலம்
மூன்றுலகத்தினுமெய்ப்பச்செய்யாடன் மொழியத்தித்திப்
பான்றபத் தாவ தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

திதிசிட் டிலயக் கிரீடைசெய் தன்பதி தீவிரரைத்
திறிதியெண் ணிச்சொல் பதச்கு சனைப்பொருட் சேர்க்குமுனைத்
திதிதினஞ் செய்ய மகவாப் பெறுகா சிபன்மனையாள்
அதிதிபே றேபே றடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

அச. இதன்பொருள்-பெருமை தங்கிய அதிதி மாதுங் காசிப முனிவருமாகிய தம்பதிகளிடத்தில் அவர்கள் செய்த தவத்தால் மகோற்கடனென்னும் பெயரையுடையவனுயவதரித்து நராந்தகன் தேவாந்தகனென்ற அசுரரிருவர்களையுஞ் சங்கரித்து மூன்றுலகத்தின் கண்ணும் நன்மை பெருகும்படி செய்த திருவிளையாடலானது, சொல்லச் சொல்ல மிக்க இனிப்பைத் தருகின்ற பத்தாந் திருவிளையாடலாகும் என்க. வான்-பெருமை; இதனை "வானென்கிளவி வலியும் பெருமையும்" என வரும் பிங்கலந்தைச் சூத்திரம்-4062ற் காண்க. மாடு-இடம். ஆன்ற-மிக்க.

அசு. இதன்பொருள் - சிருட்டி திதி லயமென்னும் படைத்தல் காத்தல் அழித்தலாகிய முத்தொழில் விளையாட்டைச் செய்து அன்பின்கண் அதி தீவிர பக்குவமுடையாரை முத்தியிற் சேர்க்கின்ற உன்னைத் தினந்தோறும் தாலாட்டிச் சீராட்டிப் பாதுகாக்கும்படி பிள்ளையாகப் பெற்ற காசிபமுனி பத்தினியாகிய அதிதித்தாய் பெற்ற செல்வமே பெறுதற்கரிய செல்வமாம் என்க. சிருட்டி என்னும் பதம், சிட்டி எனவுங் கூறப்படும்; இதனை "சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙனென்று முனங்-குட்டிச் சிறையிருத்துங் கோமானே" எனக் கந்தர்கலிவெண்

ஆகாவுந் தும்புரு வுங்கா சிபமுனி யாச்சிரமத்
தூகூவும் பூசித்த வைம்மூர்த் தியைநீ யொளிக்கவவர்
தாகாவென லுமைந்தையுமுன் வாய்க்காட்டித் தந்தனையால்
ஆகா சதல வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. அசு.

---

பாவில் வருதலாலறிக. கிரீடை-விளையாட்டு. திதி எண்ணிச் சொல்பதச் சூசனைப் பொருள் என்பதானது, மோக்ஷம் எனக் கொள்ளப்படும்; எவ்வாறென்னில்" தகரவிகாரமாகிய உயிர்மெய் யெழுத்து மூன்றனை யெண்ணிச் சொல்லுதலா லாகிய முத்தி என்னும் பதத்திற்குக் குறிப்பினுற் கொள்ளப்படுமர்த்த மாதலா லென்றறிக. சூசனை-குறிப்பு; இது சூஜநா என்னும் வடமொழி. கடவுளுக்குப் பாரமின்றி லெகுவிற்செய்தல் பற்றி முத்தொழிலும் விளையாட்டெனச் சொல்லப்படுதலை "சிருஷ்டி ஸ்திதி லய க்ரீடாய நம:" என விநாயக சகத்திர நாமத்தில் ஒருநாமம் இருத்தலாலும் "சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னில்-முன்னவன் விளையாட் டென்று மொழிதலுமாம்" எனச் சிவஞான சித்தியாரிலும் "காத்தும் படைத்துங் காந்தும் விளையாடி" எனத் திருவாசகத்திலும் "விளம்பு மிந்தப் பசுக் கடமைப் பாசத்தாற் கட்டியருள் விளையாட்டாடும்" என உபதேச காண்டத்திலும் "மெய்யுணர் வின்பச் சத்தியுஞ் சிவமும் விளக்கு மிவ் விளவுகளெல்லாம்-மையறத் தெளிந்தோர் திருவிளை யாட்டின் வண்மையென் றியம்புவர் மன்னே" எனக் காஞ்சிப் புராணத்திலும் கூறப்படுதலாலும் அறிக.

அசு. ஆகா, ஊகூ என்போர் இரண்டு கந்திருவர். தும்புரு என்பவர், நாரதரின் சகபாடியாகிய ஒரு முனிவர். இம்மூவரும் காசிப முனிவரது ஆச்சிரமத்தில் ஸ்ரீ விநாயகப் பெருமான்மகோற் கடனென அவதாரஞ்செய்து பாலநல்லுருவாய் விளையாடிய போது வந்து தனித்தனி பூசித்துக்கொண்டிருந்த அவரதாந் மார்த்த மூர்த்திகளாகிய சூரியன், கணபதி, விட்டுணு, அம்பிகை,

சீர்க்கா சிபன்மக னுமுனே யுய்த்தனன் சேய்மணத்திற்
கேர்க்காசி மன்னனுடனழைத் தேகவேந் தேயுயிர்போற்
சேய்க்காத்து மீட்டுய்த்தி யென்று ளதிதி சொநகனினும்
ஆய்க்கார்த்தி மிக்கா மடியேன் றுயர்கெடுத்தாண்டருளே.

அஎ

திருந்துகா சிக்குமன் சேய்மணஞ் செய்யப்போய்த் தேசிகனு
யிருந்த பொழுதத் தலத்தார் தனித்தனி யெய்தியுனே
விருந்துக் கழைக்க வொரேசம யந்திரு மேனிபல்கொண்
டருந்தினை யிற்றோ றடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

சிவன் என்ற ஐந்து விக்ரகங்களேயும் எடுத்தொளித்த வுடனே காணாமையாற் பதறி விநாயக ரெடுத்தமையை அவாது புன்சிரிப் பாற் காசிபரின் முன்னிலையிற் றெரிந்து அவைகளைத் தந்தெம் மைக் காக்கக் கடவாயென்று வேண்டுதலும், விநாயகப்பெருமான் தன் வாயைத் திறந்து ஐவரும் அவனே யென்பது தோன்ற அவ்வைவர்தையும் அங்கிருப்பக் காட்டிப் பின்பு கொடுத்தருளின ரென்பது, விநாயகபுராண கதை. ஆகாசதலம் - சிதம்பர தலம்.

அஎ. இதன்பொருள்-சிறப்புற்ற காசிபமுனிவரானவர் தமது மகனுகிய உன்னைக் காசிராசனது பிள்ளையினுடைய கல்யாணத் தைச் செய்துவைத்து வருதற்காக அந்த அழகிய அரசன் தன் னுேடழைத்துப் போம்படி அனுப்பினர் (அப்பொழுது) அதிதி என்னுந் தாயானவள் ஏ! காசிராசனே என் பிள்ளையை உன் னுயிரைப் போலப் பாதுகாத்து வைத்திருந்து திரும்பக்கொண்டு வந்து ஒப்புவிக்கக் கடவாயென்றாள். (ஆதலால்) தந்தையைப் பார்க்கிலும் தாய்க்குப் புத்திரவாஞ்சை யதிகமாம் என்க. சொநகன்-பிதா. ஆய்-தாய். ஆர்த்தி என்பது, ஈண்டுப் புத்திர வாஞ்சை.

அஅ. காசிக்கு மன் சேய் மணம் செய்யத் தேசிகனுய்ப் போயிருந்தபொழுது-காசித்தலத்திற்கு அத்தலத்தரசன் மகனது

திருமான் மகன்பூ சுரனுகி நின்சத்தி சித்திபுத்தி
யிருமாதை யீய மகோற்கட னுய்மணத் தேற்றனீ
கருமாறிக் காசினி கண்டு களித்துக் கதியடைய
அருமா மயானத் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
அசு

பதினேன்றும் அவதாரம்.

ஈடுறு டுண்டி விநாயக னுய்வந் திமாசலைபாற்
சோடை துறந்து சுரர்கள் சுகிக்கத் துராசதனைத்
தாடலை வைத்தவி முத்தக் குணவாய்தற் ருழ்த்தியதுன்
ஆடல்பன் னென்று மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

கல்யாணத்தைச் செய்துவைக்க ஆசாரியனுய்ப் போயிருந்த காலத்தில். பல்-பல. இல்தோறும்-வீடுகடோறும்; தோறும் என்பதின் உம்மை விகாரத்தாற் ருெக்கது.

அசு. திருமால் மகன்-பிரமா. பூசுரன் - பிராமணன். மணம்-கல்யாணம். கருமாறி-கெர்ப்பத்திற் றங்கும் பிறவித்துன்ப மொழிந்து. மாமயானம்-காசி க்ஷேத்திரம்; இது, மஹாஸ்மஸாநம் என்னும் வடமொழி நாமம்.

கூ0. ஈடு-வலிமை; பெருமை எனினும் பொருந்தும். இமாசலை பால் வந்து-பார்வதியினிடத்திற் றிருவவதாரஞ் செய்து. சோடை-சோர்வு; இதனை "பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய் சட்டவுண்டு" எனத் திருவாரூர்த் தேவாரத்தில் வருதலாலறிக. துறந்து-நீங்கி. சுகிக்க-சுகம் அடைய. துராசதன் என்பது, பத்மாசுரனுடைய மகன் பெயர். தாள் தலை வைத்து-ஒருபாதத்தை உச்சியின்மேல் வைத்து. அவிமுத்தம்-காசி க்ஷேத்திரம். குணவாய்தல்-கீழ்த்திசை வாய்தல். தாழ்த்தியது உன் ஆடல் பன்னொன்று ஆம்-ஈங்கிருந்து பாதகத் துட்டரை யடக்கென ஆக்ஞைபண்ணி யிருத்திவைத்ததாகிய உடுண்டி விநாயகத்திருவவதாரமானது, உனது பதினோாவது திருவிளையாட லாகும் என்க.

ஈனந் துராசத னெய்தப் பலரா யிகலக்கொள்ளுன்
ஞானந் தவாவுரு வேழெட்டே ழாவர ணத்துமுற்ற
மானந்தக் கண்டவர்க் கிச்சித்த நாற்பயன் வாய்த்திடுமா
ளுனந்த கானத் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

சீரண வாசித் திவோதாதன் பாற்சோ திடனெனப்போய்
நாரண வாசி மறையோன் சொலுமா நடவென்றகல்
வாரண வாசித் தலத்தகி லேசனை வாழவைத்தாய்
ஆரண வாசி யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கூஉ.

---

கக. துராசதன் என்பது, பத்மாசுரனுடைய மகன் பெயர். ஏழ் எட்டு உரு-ஐம்பத்தாறு திருவுருவம். ஏழ் ஆவரணம்-சத்தா வரணம். மால்நந்த-அஞ்ஞானங்கெட. நாற்பயன்- அறம் பொருள் இன்பம் வீடு. ஆனந்தகானம்-காசி க்ஷேத்திரம்.

கஉ. சீர் அண்ண-சிறப்புப் பொருந்த. வாசித் திவோதாதன் பால் - குதிரைகளையுடைய திவோதாதனென்னும் காசிராஜ னிடத்து. நாரண ஆசி மறையோன்-விட்டுணுவாகிய ஆசீர்வாதம் செய்தற்குரிய பிராமணன். சொல்லுமாறு-சொல்லும் வழியிலே; சொல்லுமாறு என்பது, சொல்லுமா என ஈறுகெட்டு வந்தது; "நினையுமா நினையே" "பணியுமா பணியே" எனத் திருவிசைப் பாவிற்கெட்டவந்தாற்போல. வாரணவாசித்தலம்-காசிக்ஷேத்திரம்; வாரணுசி எனவும் வாராணசி எனவும் இருமொழிக்கண்ணும் வழங்கப்பட்ட காசித்தலத்தின் பெயர் தென்மொழியில் "வாரண வாசி" என்றும் பிரயோகிக்கப்பட்டிருத்தலை "வாரண வாசியாண் மன்ன னுயினேன்-ஏாணி முனிவா விங்கு நான்வருங்-காரணங் கேள்" என விநாயகபுராணம் மகோற்கடர் திருவவதாரப் படலம் 36 4-விலும் "வாழ்வினிற் சிறந்து தாழ்வறப் பொலியும் வாரண வாசிமா நகரும்" எனச் சூதசங்கிதை சிவத்தல விசாரமுரைத்த வத்தியாயம்-13-லும் கூறப்படுதலாலறிக. அகிலேசன்-விசுவ

புவிமுத்தந் துண்டி விநாயக வென்றந்ந பூரணிசாம்
பவிமுத் திருக்க ரணைத்துமோந் தீந்துபா ராட்டவுற்றாய்
சவிமுத் திறைத்தகந் தோய்வோர்க்குப் போக்குமந் தாகினிசூழ்
அவிமுத்தந் தன்னி லடியேன் றுயர்கெடுத்தாண்டருளே.

பன்னிரண்டாம் அவதாரம்.

ஈசனு மீசையு மேசீயும் வல்லபை யும்மெனலைப்
பேச மரீசி மகளாய்ச் சிவைவரப் பின்கயிலை
வாச சிவனீ கணேசனென் றுற்று மணந்தருளாட்
டாசிலி ராறு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கூச.

---

நாதன். ஆரணவாசி - வேதத்தின்மீது வசிப்பவன்; இதனை "மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையா-மறையே நமது வாகனமாம்" எனத் திருவிளையாடற் புராணத்திலும் "மறைச் சிரமிருக்குந் திருவடிச் செல்வமே" எனத் திருக்கருவைப்பதிற்றுப்பத் தந்தாதியிலும் "சுருதி முடிமீதிருந்தவையனே யப்பனே யெனுமறிஞரறிவைவிட் டகலாத கருணை வடிவே" எனத் தாயுமானசுவாமி பாடலிலும் கூறுமாற்றாலறிக.

கங. துண்டிவிநாயக என்று அந்நபூரணி சாம்பவி முத் திருக்கர் அணைத்து மோந்து முத்தம் ஈந்து பாராட்ட உற்றாய்-துண்டி விநாயகனே வருகவென்று அந்நபூரணியாகிய பார்வதி தேவியாரும் மூன்றுகண்களையுடையவராகிய விசுவநாதப் பெருமானும் தழுவி யுச்சிமோந்து முத்தமிட்டுக் கொண்டாடத் தங்கினாய். சவி முத்து இறைத்துத் தோய்வோர்க்கு அகம்போக்கும் மந்தாகினி சூழ் புவி அவிமுத்தம் தன்னில்-ஒளியையுடைய முத்துக்களை யிருமருங்கினும் வீசித் தன்பால் மூழ்குவோர்க்கு அவரது பாவங்களைப் போக்கடிக்கின்ற கங்காநதியாற் சூழப்பெற்ற இப்பூமியின்கணுள்ள காசி க்ஷேத்திரத்தின்கண்ணே என்க.

கச. இதன் பொருள்-சர்வேசுவரனுஞ் சர்வேசுவரியுமே கணேசனாகிய நீயும் வல்லபையம்மையு மானீர்கள் வேறில்லை

முச்சகம் போற்றுமுன் கீதைமெய்ஞ் ஞான மொழிந்துமகா
விச்சுவ ரூபமுங் காட்டி யருளினை மெய்த்தவஞ்செய்
திச்சையி னீன்றதன் பன்னிரு மாதரை யீந்திரந்த
அச்சுத மாமற் கடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கரு.

சந்திர காந்தன் பிருகுவின் பாலுன் சரித்திரங்கேட்
டுய்ந்தன னெய்தவிர்ந் துன்னுல குற்றெச்ச மூரரொடும்
சிந்தையிற் றேர்ந்துமுன் காதைச் சிரவணஞ் செய்திலனே
ஐந்து காத்த வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கசு.

---

யென்று சாத்திரங் கூறுதலை ஆன்றோரனைவரும் பேசும்படிக்கு, மரீசி முனிவரது புத்திரியாய்ச் சர்வேசுவரியானவள் வல்லபை என்னும் பெயர்பூண் டவதரிக்க, கயிலாச வாசியாய்ச் சர்வேசுவரனாகிய நீ கணேசனென்னும் பெயர்பூண்டு வந்து திருக்கல்யாணஞ் செய்தருளியதானது, குற்றமற்ற உனது பன்னிரண்டாவது திருவிளையாடலாகும் என்க.

கரு. உன் கீதை மெய்ஞ்ஞானம்-உனது விநாயக கீதையென்னும் மெய்ஞ்ஞான சாத்திரத்தை. பன்னிருமாதராவார், மோதை, பிரமோதை, சுபகை, சுந்தரி, மனோரமை, மங்கலை, கேசினி, காந்தை, சாருகாசை, சுமத்திமை, நந்தினி, காமதை என்னும் பெயருடையவர்கள்; அச்சுத மாமற்கு-விட்டுணுமூர்த்தியாகிய மாதுலருக்கு.

கசு. சந்திரகாந்தன்-சோமகாந்தனென்னும் அரசன். பிருகு-பிருகு முனிவர். எச்சம்-பிள்ளை. சிரவணம்-கேட்டல். சந்திரகாந்தன் உய்ந்தனன் எனக்கூட்டுக.

சங்கப் புலவர் சமய குரவர்பாச் சானுஞ்செவித்
தங்கத் தரமிலே யென்ரேருதுக் காதிச் சதகத்தையும்
இங்கீன்றவர்சேய் விருப்பான் மழலையை யேற்பதுபோல்
அங்கீ கரித்தேற் றடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

மாசம் புசுத விரண்மய கோச வரபுரநி
வாசம் புரிபவ வைம்பொறி தாமத மார்க்கமுற
வீசம் படர்தல்கண் டாலே யெனைவெள்க மேத்தியர்வை
தாசம் புரிவ ரடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கூஅ.

---

கஎ. தரம்-உயர்வு. இங்கு-பூலோகமாகிய இவ்விடத்தில். ஈன்றவர் சேய் விருப்பால் மழலையை ஏற்பது போல்-பெற்றபிதா மாதாக்கள் குழந்தையின்மேற் றம்வைத்த அன்பினுல் அக்குழந்தை சொல்லுகின்ற சொன்னயம் பொருணயமில்லா மழலைச் சொல்லை யேற்றுக்கொள்ளுதலைப் போல. அங்கீகரித்து ஏற்று-சம்மதத்தோ டொப்புக்கொண்டு என்க; முத்தொழிற்குரிய மூவருமே தமது துதியைஏற்றுக்கொள்வதற்கு, சேய்விருப்பான் மழலையை யேற்கும் பிதாமாதாக்களைச் சாமியங்காட்டி முழுமுதற் கடவுள்பால் வேண்டியிருக்கின்றனராதலால் இவ்வாறு வேண்டப்பட்டது; மூவரும் வேண்டியிருக்குமாற்றை "மைந்தர்கள் குழறிப் பேசு மழலைமென் கிளவி வேட்குந்-தந்தையுந் தாயுமென்னத் தமியரேம் புகழ்ச்சி கொண்டு-புந்திமிக் குவகைபூப்பத் திருவருள் புரியீ ரென்று-நைந்திரு விழிநீர் சோர நயந்திருந் துதிகள் செய்தார்" எனக் காஞ்சிப்புராணத் திருவேகம்பப்படலத்திற் கூறுமாற்றா லறிக.

கூஅ. மாசம்பு சுத-மஹத்தாகிய பரமசிவ புத்திரனே. இரண்மயகோசபுரம்-சிதம்பர க்ஷேத்திரம். வரம்-சிரேட்டம். நிவாசம் புரிதல்-நீங்காதுறைதல்; இதனை ஸ்ரீநிவாசன் என நாராயணனுக்

எழுவாயிற் காமித் தெனையிழந் தாற்றித்தி தீற்றுணர்ந்திவ்
வழுவாயி லாத்தி வருமேயென் றெண்ணி மறுகுகின்றேன்
கழுவாய் செயேனுய்ந்து போக்கென் வசமன்றுன் காலைப்பிடித்
தழுவாயினேற்காத் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

சுகக

---

கேற்பட்ட பெயர்ப் பொருளா லறிக. ஐம்பொறிதாம் மதமார்க்கம் உற வீச அம்பு அடர்தல் கண்டாலே-பஞ்சேந்திரியங்களும் மன்மதனது போகமார்க்கத்திற்பட் டுழலும்படி வாசனையைச் செய்கின்ற புட்பபாணங்கள் ஒன்றின்மேலொன்றாய் நெருங்கிவிழு தலைப் பார்த்தாலே என்க; இப்பொருட்குத்தாம் என்பது, படர்க் கைப் பன்மைப்பெயர்; இனி, ஐம்பொறி தாமத மார்க்கம் உற வீசம் படர்தல் கண்டாலே எனப்பிரித்து, பஞ்சேந்திரியங்களும் முக்குணத்துட் டாழ்ந்ததாகிய தாமதகுண மார்க்கத்திற் பதினாறிலொன்றான வீசம்பங்கு செல்லுதலைப் பார்த்தாலே எனப் பொருள்கோடலுமொன்று; முக்குணத்துட்டாழ்ந்த தாயுள் ளது தாமதகுணமென்பதை "சகல ரும்பலர் சத்து வக்குணந்-தொகுவர் நீயதிற் றேற்ற முற்றிலை - யிகுமி ராசதத் திழித மோகுணம்-புகுநர் நிற்புறங் கண்டு ளாருளார்" எனத் தணிகைப் புராணம் வீராட்டகாசப் படலத்திற்கூறுமாற்றாலறிக. மேத்தியர்-உயர்ந்தோர். ஆசம்புரிவர்-சிரிப்பர்; ஆசம் எனச் சிரிப்புக்குப் பெயருண்டென்பதை "புரங்கடி யாச போற்றி" எனத் திரு நாகைக்காரோணப் புராணத்தில் வருமாற்றாலறிக.

கக. இதன்பொருள். எழுவாயில் காமித்து என்னை இழந்து தீது ஆற்றி ஈற்று உணர்ந்து இவ்வழு வாயிலா தீ வருமே என்று எண்ணி மறுகுகின்றேன்-ஆரம்பத்தில் இச்சைகொண்டு அதின் மூழ்கி யிச்சிக்கப்பட்ட முன்னிலைப்பொருண் மயமாய் என்னை யிழந்து பாவங்களைச்செய்து செய்தானமுடிவில் ஸ்மரணை யுற்று இப்பாவத்தா லேற்பட்ட குற்றவாயிலாக மறுமையில் நரகம்

வந்து சேருமே யென்று நினைத்து மனஞ் சுழன்றுகொண்டிருக்கின்றேன். கழுவாய் செய்யேன்-அதற்குரிய பரிகாரத்தையும் புரியேன். உய்ந்துபோக்கு என் வசமன்று-தப்பித்தீடேறுதல் என்னாற் செய்துகொள்ளுந் தன்மையதன்று. உன் காலைப் பிடித்து அழு வாயினேற் காத்து-உனது திருவடிகளைத் துணையாகப் பற்றிக்கொண்டு அழுகின்ற வாயினையுடைய என்னைக் காப்பாற்றி என்க. ஈண்டு எனை யிழந்து என்றது, ஆன்மா கருவி காணங்களை அநுசிதகர்மாவில் :வீழ்த்தி அதன் மயமாதலிற் றன்னையிழந்த இழப்பினை யென்றறிக. தீது-பாவம்; இதனை "உள்ளத்தாலுள்ளலுந் தீதே பிறன்பொருளைக் - கள்ளத்தாற் கொள்வே மெனல்" என்னுந் திருக்குறளாலும் அதனுரையாலும் "விளக்குநெய் தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை-தீர்விடத்து நிற்குமாந் தீது" என நாலடியாரிற் கூறப் படுதலாலும் அறிக. வழு-குற்றம். வாயிலாக எனவரற்பாலது, ஆகவென்னும் வினையெச்சத்தீறு தொக்கு வாயிலா என வந்தது. தீ-நரகம்; இதனை "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்-தீயுழி யுய்த்து விடும்" என்னுந் திருக்குறளாலும் அதனுரையாலும் "நிரயமே யளறே தீயே நீள்சுவப் பிரமே யூழல்-நரகிருள் பவர்க்கம் பத்து நரகமாம் பூதி யும்பேர்" எனச் சூடாமணி நிகண்டில் வருமாற்றாலும் அறிக. மறுகுதல்-சுழலுதல்; இதனை "மறுக்கம்படு மறையோன்மன மகிழும்படி நல்கி" எனப் பாரதம் அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கத்திற் கூறுதலாலும் பிங்கலந்தை-2184-ஆம் சூத்திரத்திற் கூறியிருத்தலாலும் அறிக. கழுவாய்-பரிகாரம்; பிராயச்சித்தம் எனினுமாம். உய்ந்துபோக்கு-தப்பித்தீடேறுதல்; இதனை "பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெனப் பற்றினையே" எனத் திருவாரூர்த் தேவாரத்தில் வருமாற்றால் அறிக. ஆற்றித்தீது என்பதைத் தீது ஆற்றி என மாற்றி அந்வயப்படுத்திப் பொருளுரைக்கப்பட்டது.

படைக்கலங் கொண்டெனைப் பற்றிப்போ யந்தன் படுத்தினறன்
கடைக்கல மானேனென் றப் பித்தலெவ் வாறுகா வாதெனைநீ
துடைக்கிற் றுணைவே றிலைகட னிற்கேயத் துன்புக்கஞ்சி
அடைக்கலம்புக்கே னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

கoo

தேசம் புகழுந் திருத்தில்லை மேலைச் சிகரியிலே
வாசம் புரியு மகோற்கட மேலுன் மலரடிக்கு
நேசம் பெருக வடியேற் கருள்வது நின்கடனும்
ஆசந் திரார்க்க மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

கoo. படைக்கலம்-ஆயுதம். அந்தன் படுத்தின் - இயமன் னையும்படி சிதைத்தானுனல்; படுத்தல் - சிதைத்தல்; இதனை "விடுத்தனன் விடுத்த சரமெலா முரகன் வெறுந்துகள் படக் கறித்துமிழ்ந்து படுத்தனன்" எனத் திருவிளையாடற் புராணம் நாகமெய்த படலத்திற் கூறுமாற்றுலறிக. அறன்கடைக் கலம் ஆனேன்-பாவத்திற்குப் பாத்திரமாயுள்ள நான்; ஆனேன் என் பது, தன்மைவினையாலணையும் பெயர்; அறன்கடை என்று பாவத்திற்கும், கலம் என்று பாத்திரத்திற்கும் பெயருண்டென் பதை "அறன்கடை நின்றாருளெல்லாம்" எனவும் "நன்பால் கலந் தீமையாற் றிரிந்தற்று" எனவுந் திருக்குறளிற் கூறுதலாலறிக. எனை நீ துடைக்கில் - என்னை நீ காப்பாற்று தொதுக்கித் தள்ளினுல்; துடைத்தல் - தள்ளுதல்; இதனை "துடைக்கினும் போகேன் றொழுது வணங்கித்தூ நீறணிந்துன்-அடைக்கலங் கண்டா யணிதில்லைச் சிற்றம்பலத்தரனே" எனத் தேவாரத்தில் வருமாற்றுலறிக. அடைக்கலம்புக்கேன் - பாதுகாத்தியெனச் சரணடைந்தேன்.

கoக. மேலைச்சிகரி-மேலைக்கோபுரம். வாசம் - வசித்தல். மகோற்கடன் என்பது, விநாயகப்பெருமான் கொண்ட திருவவ தாரம் பன்னிரண்டனுள் ஓரவதாரப் பெயர். மேல்-இனிமேல்; பொருடியமெனப்படும் எதிர்காலத்தில் என்பதாம். ஆசந்திரார்க் கம்-சூரிய சந்திரர்களுள்ள எக்காலத்தும் என்க, இது வடமொழி.

உன்பதங் கோயிற் றலத்துற் றுபாசிக்கு முத்தமர்க்குச்
செம்பொரு ளீவ ருனதருட் சத்தியாஞ் சித்திபுத்தி
இன்பம் பெருகும் பொருளறத் தோடவ ரில்லுறைவாள்
அம்புயப் பொன்மா தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
க0உ

---

க0உ. கோயிற் றலம்-சிதம்பர க்ஷேத்திரம். செம்பொருள்-நித்த சுத்த வியாபகமுடைய சிவப்பொருள்; இதனை "பிறப்பென்னும் பேதைமை நீங்கச், சிறப்பென்னுஞ் செம்பொருள் காண்ப தறிவு" என்னுந் திருக்குறளானும் அதனுரையானும் அறிக. உத்தமர்க்கு ஈவர் எனவும் பெருகும் எனவும் முடிக்க. அவர் இல் உறைவாள் அம்புயப் பொன் மாது-அவ் வுத்தமர்களுடைய வீட்டின்கண் வசிப்பாள் தாமரைமலர்மீ துறையும் இலக்குமி தேவி.

ஸ்ரீ குஞ்சிதபாதந் துணை.

திருச்சிற்றம்பலம்.

# தில்லைக்

# கற்பக விநாயகர் சதகம்

முற்றிற்று.

---



## வா ழ் த் து.

### தேவாரம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதே லாமர னுமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.

---

☞ இச்சதகமானது, கோவிந்த சதகத்தையும் கோகுல சதகத்தையும் போல-102-செய்யுட்களாற் பூர்த்தியடைந்தது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தில்லைக்

# கற்பக விநாயகர்

## தோத்திரம் எழுபது.

---

### காப்பு.

கட்டளைக் கலித்துறை.

பூமா துறைதில்லைக் கற்பகப் பிள்ளையார் பொன்னடிக்கு
யாமா தரவி னுரைதோத் திரமெழு பானுமுற்றக்
காமாரி சீமந்த புத்திர னென்று கலைசொலந்தச்
சீமான் சிவகணக் கோமான் றிருவருள் செய்குவனே.

---

காப்பு. எழுபான்-எழுபது. காமாரி-மன்மத வயிரியாகிய சிவபெருமான். சீமந்த புத்திரன்-பிரதமகெர்ப்பத்திலுற்றுச் சீமந்தச்சடங்கு செய்யப்பெற்றுப் பிறந்த தலைப்பிள்ளை. கலை-சாத்திரம். அந்த என்பது-மேற்கூறிய பிள்ளையாரைக் குறித்த சுட்டுச்சொல். சீமான்-தலைப்பிள்ளையாதலாற் சிவனுடைமை முழுதையும் அடைதற்குரிமை பூண்ட செல்வவான். சிவகணக் கோமான்-சிவகணங்கட் கெல்லாம் அரசன்; அரசனாதலாற்றான் விநாயக சகத்திரநாமத்தில் 116-ஆவது நாமம் "ஓம் கணாதி ராஜாய நம:" எனக் கூறப்பட்டது; கணபதிப்பெயர் வரலாற்றை விநாயக புராணம் கணபதி திருவவதாரப்படலம் 41-ல் "கணங்

## நூல்.

### கட்டளைக் கலித்துறை.

சீரணி தில்லை நடேச பிரான்சிவ காமியென் னும்
நாரணி யோடு நயந்துல குய்வதை நாடிநல்கும்
காரணி போற்கொடை வாய்கைக் கசானனக் கற்பகமே
ஆரணி வேணி யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. க.

---

களுக் கெல்லா முதன்மையாம் பதியாய்க் கருணைசெய் திடுகவெம்
மருளால்-இணங்குமிச்செயலாற் கணபதி யென்ன யாவருமியம்புக
தின்னை" எனச் சிவ வர வாக்கியமாகக் கூறப்படுதலாலறிக.

க. சீர் அணி தில்லை நடேசபிரான் சிவகாமி என்னும் நாரணி
யோடு நயந்து-சிறப்புப் பொருந்திய சிதம்பரதலத்தமர்ந்த நடேசப்
பெருமானனவர், சீவகோடிகளனைத்துஞ் சிவகாமங் கொண்டுய்யு
மாறு மாதாவாகிய தான் அதனைக் கொண்டு நிற்றலாற் சிவகாமி
யென்னுங் காரணப் பெயரைப்பெற்ற உமாதேவியாரோடுங் கூடி
மகிழ்ந்து. உலகு உய்வதை நாடி நல்கும்-எல்லா வுலகமும் ஈடேறு
வதை யாராய்ந்து ஈன்றருளிய. கார் அணிபோற்கொடை
வாய் கைக் கசானனக் கற்பகமே-மேகவரிசையைப்போலக் கைம்
மாறு கருதாக் கொடைவாய்ந்துள்ள ஐந்துகரங்களையும் யானை
முகத்தையுமுடைய கற்பக விநாயகக் கடவுளே. ஆர் அணி வேணி-
திருவாத்திப் பூமாலையைத் தரித்த சடையினையுடையாய் என்க;
வேணி என்பது, அதனையுடையானை யுணர்த்திற்று; மறைசை
யந்தாதியில் "எருக்காவீர மதிவேணி வெற்பி னெழிலியன்றே"
என்ற செய்யுளில் உடையானை யுணர்த்தினாற்போல. சிவகாமி
யென்னுங் காரணப்பெயர்ப் பொருளை "கோதளவு முயிர்சிவத்
தைக் காமுறவே சிவகாமங் கொண்டு நின்ற - காதளவுங்
கருந்தடங்கட் சிவகாம சுந்தரியைக் கருத்துள் வைப்பாம்"

பங்கய வாவி பரவும் புலியூர்ப் பரமபதி
சங்கர னீன்றருள் கற்பகப் பேர்கொ டயாநிதியே
சிங்கமொ டாகு மயூரஞ் செலுத்துஞ் செயப்பிரதா
அங்குச பாச வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. உ

---

என விநாயக புராணத்திற் கூறுமாற்றாலறிக. உமாதேவிக்கு, நாரணி என்னும் பெயருண்டென்பதை, "தமால ருசிபாசுர கந்தராய நாராயணீ சஹசராய நமசிவாய" என வடமொழிச் சிவதத்துவ விவேகத்தின் முதற்சுலோகத்திலும் "ஸர்வ மங்கள மாங்கள்யே சிவே ஸ்ர்வார்த்த ஸாதகே - சரண்யே த்ரியம்பகே தேவி நாராயணி நமோஸ்துதே" என இந்திராக்ஷி ஸ்தோத்திரத்திலும் "பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி புராந்தகி த்ரியம்பகி யெழிற் புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்ரதள புட்பமிசை வீற்றிருக்கும்-நாரணி மனாதீத நாயகி குணாதீத நாதாந்த சத்தி யென்றுன் னாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே நானுச் சரிக்க வசமோ" எனத் தாயுமான சுவாமி பாடலிலும் "அணியவ னந்தி மருதூர னென்றிறைஞ் சன்பர்க்குப் பாம்-பணியவ னந்தி வணங்கொண்ட மேனிய னனந்தனா-ரணிய வன்" என மருதூரந்தாதியிலும் கூறப்படுதலாலறிக. நயத்தல்-மகிழ்தல்; இதனை "நயமென்ப மகிழ்ச்சி யின்பம் நன்மைநற் பயனாற் பேரே" எனச் சூடாமணி நிகண்டிற் கூறுதலாலறிக. நாராயணி என்பது, நாரணி என ஆன்றோ ரெடுத்தாண்ட மரூஉ மொழியாகும்; நாராயணனென்னும் பெயர் சிவபெருமானுக் குண்டாதலால் அப்பெயர், பெண்பாற்கேற்ற விகுதி பெற்று நாராயணி என்று உமாதேவிக்காயிற் றென்றறிக.

உ. பங்கயவாவி-தாமரைத் தடாகம். புலியூர்-சிதம்பரக்ஷேத்திரம். ஆகு-பெருச்சாளி. மயூரம்-மயில். செயப்பிரதன் என்பது, விநாயக சகஸ்திர நாமத்துளொன்று.

## பரம ரஹஸியம்.

### சகத்திர நாமத்துள் ஒன்று.

நவில்வா ருனக்கொரு நாமஞ் சகத்திர நாமத்துளோம்
துவிமா துருவே நமவென் றருவுருத் துன்னுசதா
சிவசத்தி யாமனை யோடுந் மனைசேர் மநோந்மணிபால்
அவதரிப் போர்ந்தா ரடியேன் றுயர்கெடுத் தாண்டருளே
௩.

செங்க மலைக்கிறை வேத னமரர் தினமுந்தொழு
தெங்கட் குறுமிடர் நீக்கென் றிரப்ப விடர்தவிர்ப்பாய்
தங்கச் சபைப்புலி யூர்மேலைக் கோபுரந் தங்குங்கொடை
ஐங்கைச் சுமுக வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௪.

---

௩. அருவுருத் துன்னு சதாசிவ சத்தியாம் மனையோடு உந்மனை சேர் மநோந்மணி பால் அவதரிப்பு ஓர்ந்தார் சகத்திரநாமத்துள் உனக்கு ஒரு நாமம் "ஓம் துவிமாதுருவே நம:" என்று நவில்வார்-சகள நிஷ்கள லிங்கத் திருமேனியையுடைய சதாசிவப்பெருமானது சத்தியாகிய சமநாசத்தியுந்மநாசத்தியென்ற இருவருஞ் சேர்ந்துள்ள மநோந்மணிசத்தியிடத்தினின்றும் நீ தோன்றியருளுதலை யறிந்த மகான்கள் உனது சகத்திர நாமத்துள்ளே உனக்கொரு நாமத்தை "ஓம் துவிமாதுருவே நம:" என்று வைத்துக் கூறுவர் என்க; மேற்கண்ட நாமத்திற்கு, இரண்டு தாயாரை யுடையாய் என்பது பொருள்; இந்த நாமம், வடமொழிச் சகத்திரநாமப் புத்தகத்திலிருப்பதோடு விநாயகபுராணம் சகத்திரநாமப்படலம்-43-ஆஞ் செய்யுளிலுஞ் சொல்லப்பட்டிருத்தலால் ஆண்டுங் காண்க. சமநாசத்தியாவது, மனத்தாற் பாவிக்கத்தக்க உருவமுடைய சத்தியாம்; உந்மநாசத்தியாவது, மனத்தாற் பாவித்தற்கெட்டாத அருவமுடைய சத்தியாம்; இவ்விரண்டுஞ் சேர்ந்திருத்தலாற்றான் அருவுருவத் திருமேனிகொண்ட சதாசிவத்திற்குரிய சத்தி, மநோந்மணி எனப்பட்டனள்.

௪. செங்கமலைக்கு இறை-விட்டுணு. கொடை-ஈகை.

சகத்திர நாமத்துள் ஒன்று.

சாதக மன்பர்க்கு நீயாத ரேற்றுஞ் சகத்திரமாம்
பேர்தமு ளுத்தம மாய்மந் திரதந் திரப்பிரதி
வாதி முகத்தம்ப னென்றுனக் கோர்பேர் வழங்கிடப்பட்
டாதி பகவா வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ரு.

நாரண னாதி சகலரும் போற்று நளிநபதா
பூரண போத வியாக்கிர மாபுர பூதபதே
காரண மின்றி யுயிர்களில் வைத்த கருணையனே
ஆரண மோதி யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. சு.

மதோந்மத்த னாகி மறந்தங் கிரியை மகான்கள்சொன்ன
இதோபதே சங்கொளே னென்னினுந் தில்லையுற் றேனின்பத்ம
பதோபய சேவை நெகாமனத் தோடேனும் பண்ணினன்பின்
அதோகதி மேவா தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

ரு. சகத்திரம் ஆம் பேர்-சகத்திரநாமாவளி. "மந்திரதந்திரப் பிரதிவாதி முகஸ்தம்பாய நம" என்பது, விநாயக சகத்திர நாமத்துள் ஒன்று. அந்த நாமத்தின் அர்த்தம், தன்னுடைய அன்பர்கட்கெதிரிகளாய் வந்த மந்திரோபாயந் தந்திரோபாயங்களில் வல்ல பிரதிவாதிகளின் முகத்தை எதிர்த்து விவகரித்துப் பேசவொட்டாமல் ஸ்தம்பிக்கச் செய்பவன் என்பதாம்.

சு. நளினம்-தாமரைப்பூ. பூரணபோதன்-முற்றறிவையுடையவன். வியாக்கிரபுரம்-சிதம்பர க்ஷேத்திரம். பூதபதே-பசுபதியே. அவ்வியாஜ கருணாமூர்த்தியென வேதம் ஓதியதை நன்கு விளக்குவான், காரணம் இன்றி உயிர்களில் வைத்த கருணையனெனப்பட்டது; இவ்வாறு லளிதா சகஸ்ரநாமத்தில் "அவ்யாஜ கருணாமூர்த்தி ரஞ்ஞாநத்வாந்த தீபிகா" எனக் கூறியதூஉங் காண்க. ஆரணம் ஓதி-வேதங்களைத் திருவாய் மலர்ந்தவனே.

எ. மதோந்மத்தம்-காம மயக்கம்; மதம்-காமம்; மதம் என்னுஞ் சொல் காமம் என்னும் பொருடருதலே, மதப்பிக்குங் காரணத்

குற்றம் பலசெய்தே னுய்ந்நெறி காணேன் குழைந்த துள்ளஞ்
சிற்றம் பலத்தை யடைந்துங் கதிபெருச் சீவருண்டோ
கொற்றம் பலமிழந் தஞ்ஞானத் தாலுன் குரைகழற்கன்
பற்றம் பலமுங் கடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. அ.

---

தால் மதனெனவும் மதநனெனவும் மன்மதனெனவும் காமனுக் கேற்பட்டபெயர்களாலறிக; உன்மத்தம்-மயக்கம்; இதனை "மாமத்த மனைபுக் கென்ன மனக்கருத் துடைந்து வேருய்-ஊமத்தம் பயன் றுய்த் தார்போ லுன்மத்த ளுகி யுற்ருன்" எனக் கந்தபுராணத்திற் கூறுமாற்ரு லறிக. அங்கிரியை மறந்து-உனது திருவடிகளை அயர்த்து; அங்கிரி-பாதம்; அம் கிரியை மறந்து எனப்பிரித்து, அழகிய உனது பூஜாகிரியையை அயர்த்து எனப் பொருள் கோடலும் ஒன்று. பத்ம பதோபய சேவை-தாமரை மலர்போன்ற திருவடியிணைகளின் வந்தனத்தை; இவை வடமொழிகள்; சந்தி யும் அது. நெகா மனத்தோ டேனும் பண்ணினன்-உருகாத கன் னெஞ்சோடாயினுஞ் செய்தேன்; நெகுதல் உருகுதலென்பதை யும், உருகிய நெஞ்சுடன் சேவைசெய்தலே உத்தமமென்பதையும் "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே-புக்கு நிற்பன்பொன் ஞர்சடைப் புண்ணியன்" என வருந் தேவாரத்தாலறிக. பின்-அடுத்த ஜந்மத்தில். அதோகதி-நரகம்; இதனை, பிங்கலந்தை நிகண்டு-455-ஆம் சூத்திரத்திற் காண்க. "கண்ணூர நீர்மல்கி யுள்ளநெக் குருகாத கள்ளனே னுனுலுமோ கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே கண்பனித் தாரைகாட்டி-அண்ணுபாஞ்சோதி யப்பா வுனக்கடிமை யானெனவு மேலெழுந்த வன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை" என்னுந் தாயுமான சுவாமிகள் பாடலும் ஈண்டுச் சிந்திக்கற்பாலது.

அ. கொற்றம்-ஈண்டுப் புலன்பொறிகளை யடக்குதலாலாகிய வெற்றி. பலம்-சீரிடம். அம்பல்-பழிமொழி. அழுங்கு-மூழ்கிய.

உம்பன் முகவுருக் கற்பகப் பேர்கொண்டுற் றுயுருப்பேர்
என்ப திலாசீ யுனைப்பற்றிச் சீவர் பேடுறுதற்குச்
செம்பொரு ளைத்தெரி சித்தவர்க் கீந்திடுஞ் சிந்மயமாம்
அம்ப ரதலத் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கூ.

---

கூ. உம்பல் முகவுரு-யானைமுகத் திருமேனி. கடவுட்கு சொரூப நிலையில் நாம ரூபமில்லாமையை "ஒரு நாம மோருருவ மொன்றுமிலார்க் காயிரந் - திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ" எனத் திருவாசகத்திலும் "ஊருமிலார் பேரு மிலா ருற்றூர்பெற் றூருமிலார்-ஆருமிலா ரென்னை யறிவாரோ பைங்கிளியே" எனத் தாயுமான சுவாமி பாடலிலும் கூறுமாற்று லறிக. சீவர்களுக்கு மனம் ஒரு வடிவிற் பற்றுவதொழிந்து வடி வறுதியிற் பற்றமாட்டாதாதலால், அவர்கள் தன்னைப்பற்றி யீடேறுதற்பொருட்டுக் கடவுள் நாமரூபஸஹித சகளத்திருமேனி கொண்டுற் றனரென்பதை "நிட்களன்று னன்பா னினைந்தருச் சிக் கச்சகள - நிட்களனு னிமல னே" என்னும் சைவசமய நெறிக் குறளானும் அதனுரையானும் அறிக. செம்பொருள்-பதி லக்ஷண முழுதுமமைந்த பரம் பொருள்; செம்மை ஈண்டுப் பதிலக்ஷணம்; அவை தன்வயத்தனுதன் முதலிய இறைமைக் குணங்கள் எட்டுமாம்; இனி, "தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையாற் றன்னையொன்றுங் கலத்தலின்மையிற் றூய்தாய், தான் எல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற் பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத் தாதல் பற்றி அதனைச் செம்பொருள் என்றார்" எனப் பரிமேலழகர் எழுதியிருக் கும் "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்-செம் பொருள் காண்ப தறிவு" என்னுந் திருக்குற ளுரையினும் காண்க. சிந்மயமாம் அம்பரதலம்-சிதம்பர க்ஷேத்திரம்.

உண்ணப்ப வென்றானிவேதித்தொப்பில்லா வுழுவலன்பாற்
கண்ணப்ப ரீசர்க்கோர் கண்ணப்பி முக்கண்கொள் காளத்தியில்
நண்ணெப் புவனமும் போற்றவஞ் சந்திவி நாயகப்பேர்
அண்ணிப் பொலிந்தா யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
க0.

தெருணா மகள்பதி சீபதி தேரூத் தியேயபதி
கருணா லயசிவ னுண்ணா முலைகண் களிக்கவுற்றாய்
பொருணான்கன் பர்க்கருள் யானை திறைகொண்ட போதகமென்
றருணா சலத்தி லடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
கக.

ஞானக்கோ வாய்நிறைந் தாதி விநாயக நாமத்துற்றாய்
ஊனக்கோ யிற்பணி செய்த சிலந்தியை யோங்குகுலச்
சேனைக்கோச் செங்கட் டிறற்சோழ னுக்கிச் சிவனுறையும்
ஆனைக்கா வின்க ணடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
கஉ.

---

க0-உழுவலன்பு-விடாது தொடர்ந்த அன்பு. ஓர் கண் அப்பி முக்கண் கொள் காளத்தியில்-தம்முடைய ஒருகண்ணைப்பொருத்திக் கொடுத்துச் சாரூப்பியம் பெற்றதன்மூலம் மூன்றுகண்களைப் பெற்ற ஸ்ரீகாளத்தித் தலத்தில். காளத்தித் தலவிநாயகருக்கு அஞ்சந்தி விநாயக ரென்பது பெயர்.

கக. தெருள் நாமகள் பதி-சாத்திரமனைத்தையும் அறிந்த சரசுவதிக்கு நாயகனாகிய பிரமா. சீபதி-இலக்குமிக்கு நாயகனாகிய விட்டுணு. தியேய பதி கருணாலய சிவன்-எவராலுந் தியானிக்கப் படுவோனாகிய பசுபதியும் கருணைக் கிடமாயுள்ளோனும் ஆகிய சிவபெருமான். யானைதிறைகொண்டவிநாயகர் என்பது, திருவண்ணாமலைத் தலவிநாயகருக்குப் பெயர். போதகம்-யானை.

கஉ. ஞானக்கோ வாய் நிறைந்து-ஞான நேத்திரத்தினிடத்து

வாதா விகண பதியென் றுலகேத்த வைகினைநீ
பாதார விந்தம் பணிசுந் தரர்க்காப் பரவையிற்போந்
தூதாந் தியாகர்சோ மாக்கந்த ராகிச்சோ பித்தொளிர்மூ
லாதா ரதலத் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கரு

---

வியாபித்து; ஞானக்கோ ஆய் நிறைந்து எனப் பிரித்து ஞாந சூரியனாகி வியாபித்து எனினும் அமையும்; கோ-என்பதற்கு-கண் என்றும் சூரியன் என்றும் பொருள்; இது வடமொழி. ஆதி விநாயகர் என்பது, திருவானைக்காவற் றலவிநாயகருக்குப் பெயர். ஊர்ணை-சிலந்திப் பூச்சியின் வாய்நூல். இதனை "ஊர்ணையால் யாத்த சிங்கப் போத்தென நின்றான்" எனத் திருவிளையாடற் புராணத்தில் வருமாற்றாலறிக. வாய்நூலாற் கோயிற்பணி செய்த சிலந்தியைக் கோச்செங்கட் சோழராஜாவாகச் செய்தமையை "வாயிழையாற் கோயில் வகுத்த சிலந்தியுமோர், தூயகுலச் சோழனாய்த் தொல்லுலகங் காத்ததே" என விநாயக புராணத்திலும், "சிலந்தியு மானைக்காவிற் றிருநிழற் பந்தர் செய்து-உலந்தவ ணிறந்தபோதே கோச்செங்க ணானுமாகக்-கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்-குலந்தனிற் பிறப்பித்திட்டார் குறுக்கைவீ ரட்டனாரே" எனத் தேவாரத்திலுங் கூறுமாற்றா லறிக.

கரு. வாதாவி கணபதி என்பது, திருவாரூர்த் தலவிநாயக ருக்குப் பெயர். பரவை இல் போம் தூது ஆம் தியாகர்-பரவை நாச்சியாரது வீட்டிற்குச் சென்ற தூதராகிய தியாகராஜப் பெருமான். சோபித்து ஒளிர்-ஒளிவீசி விளங்குகின்ற; மூலாதார தலம்-திருவாரூர்த்தலம், இதனை "திருவளராரூர் மூலந் திருவா னைக் காவே குய்யம்" எனத் திருவிளையாடற் புராணத்திற் கூறு மாற்றாலறிக.

ஞாலம்வாழ் வுற்றிடச் சித்தி விநாயக நாமத்துற்ருய்
கோலமார் மங்கையர் தங்கட் கரசி குலச்சிறையார்
பாலரு வாயர்சம் பந்தாற் சைவப் பயிர்வளர்த்த
ஆலவாய் தன்னி லடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

கன்னலிற் பாட வுனது புராணத்தைக் கச்சியப்பர்
சென்னைமல் லீச்சுரர் சேதிமத் துற்றருள் செய்துபிர
சந்ந விநாயகப் பேர்பூண் டனையான்சா ராமலினி
அன்னை வயிற்றி லடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

நலங்காத லோடன்பர் கட்கீந்து தேவை நகரத்துற்ருய்
கலங்காத கண்ட விநாயக நாம காணத்துடன்
மலங்காவை ாகமன்பில்லேன்செய்விண்ணப்பமாலையுமேற்
றலங்கார மாக வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

கசு.

---

கச. பாலரு வாய ராகிய சம்பந்த ரென்க; "பாசமய கோளரியைப் பாலரு வாயனைப்பூம் பழனஞ் சூழ்ந்த-சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானை" என்ற காஞ்சிப்புராணச் செய்யுளும் ஈண்டுச் சிந்திக்கற் பாலது. சித்தி விநாயகர் என்பது, மதுரைத் தலவிநாயகருக்குப் பெயர். ஆலவாய்-மதுரை.

கரு. கன்னலிற் பாட-கரும்பைப் போலப் பாடும்படிக்கு; ஈண்டு இல் என்றும் ஐந்தனுருபு ஒப்புப் பொருளில் வந்தது. கச்சியப்பர் - கச்சியப்ப முனிவர். சென்னை - சென்னபட்டினம். சேதிமம்-கோயில். பிரசந்ந விநாயகர் என்பது, சென்னைத்தல விநாயகருக்குப் பெயர். இவ்விநாயகரது திருவருளால் விநாயக புராணம் பாடப்பெற்றதென்பதை "அடுத்த விக்கதை பிரசந்ந விநாயகனருளாற் ரெடுத்தலால்" என அப்புராணத்திற் கூறு மாற்ருலறிக. இனி யான் அன்னை வயிற்றிற் சாராமல்-இனிமேல் அடியேன் தாய்வயிற்றிற் போய்ப் பிறவாமற் படிக்கு என்க.

கசு. தேவை-தேவகோட்டை. கலங்காதகண்ட விநாயகர் என்பது தேவகோட்டை வெள்ளையனூருணிக் கீழ்கரையாலயத்தி

சோமுனிந் தானு ரதன்கை யுறையீது சூழ்ந்துலகை
நாமிவண் முன்னுறு வார்க்கீவ மென்ன நடாத்திமயிற்
சாமி வருமு னினையேநீ சூழ்ந்தேதுச் சாற்றிப்பெற்றாய்
ஆமிர மொன்றை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

லுள்ள மூர்த்தியின் பெயர். மலங்காவைராகம் அன்பு இல்லேன் செய் விண்ணப்பமாலையும் ஏற்று-கலங்காத வைராக்கியத்தையு மன்பையு மில்லாத அடியேனுலியற்றிச் சாத்தப் பெற்றதான விண்ணப்பமாலை யென்னும் பிரபந்தத்தையும் அங்கீகரித்து என்க; மலங்குதல்-கலங்குதல்; இதனை "கதுவே கலுழ்தன் மலங் குதல் கலங்குதல்" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்திற் காண்க. வைராகம்-வைராக்கியம்; இது வடமொழி; இதற்கு நிராசை என்பது பொருள்; "வரவயி ராகமாம் வத்திரம் புனைந்து" எனப் பிரபுலிங்கலீலையிற் கூறுமாற்றானுமறிக. அலங்காரம்-அழகு.

கஎ. சோ முனிந்தான்-மும்மதிலைக் கோபித்தெரித்த பரம சிவன். நாரதன் கையுறை ஈது-நாரத முனிவன் நமக்குக்கொண்டு வந்து கொடுத்த வெகுமதிப்புப் பொருள் இதுவாகும். உலகைச் சூழ்ந்து முன் உறுவார்க்கு நாம் ஈவம் என்ன-உலகத்தைப் பிரதக் கிணம் செய்து முன் வருவார்க்கு இதனைக் கொடுப்போம் என்று சொல்ல;-மயில் நடாத்திச் சாமி வருமுன் நினையே நீ சூழ்ந்து ஏதுச்சாற்றி ஆமிரம் ஒன்றைப் பெற்றாய்-மயில் வாகனத்தைச் செலுத்தி முருகக் கடவுள் வந்து சேர்தற்கு முன்னே உன்னையே நீ வலம் வந்து, அதுவே உலகைச் சூழ்ந்தமையாய் முடியுமென் பதற்குத் தக்ககாரணமுஞ் சொல்லி, அம்மாங்கனி யொன்றைப் பெற்றுக்கொண்டாய் என்க-விநாயகர் கனி பெற்றமையை "கொம்பனைய வள்ளி கொழுநன் குறுகாமே-வம்பனைய மாங் கனியை நாரையூர்-நம்பனையே, தன்னவலஞ் செய்துகொளுந் தாழ்தடக்கையாய்" எனவும் "உலகை வலம்வருமப், புலஞ் செய்த காட்சிக் குமாற்கு முன்னே புரிசடைமேற், சலஞ்செய்த

பள்ளியிற் பாலர் மநநம் வரப்பாடம் பண்ணிவையென்
றுள்ளித் தொழவக் கணமேகை கூட வுபகரிப்பாய்
விள்ளு மெதையுஞ் சுலபத்தி னீயும் விகடனன்றோ
அள்ளு மழகா வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. கஅ.

---

நாரைப் பதியான் றன்னைக் கனிதரவே, வலஞ்செய்துகொண்ட மதக்களிறே" எனவும் பதினொராந் திருமுறை விநாயகர் திருவிரட்டை மணிமாலையிற் கூறுமாற்றாலறிக.

கஅ. பள்ளி-பள்ளிக்கூடம். பாலர் மாணவச் சிறுவர். உள்ளி நினைத்து. விள்ளுதல்-சொல்லுதல். சுலபத்தில்-லெகுவில்; எளிதிலெனினும் பொருந்தும். விகடன் என்பது, விநாயக துவாதச நாமத்துள் ஒன்று. அள்ளும் அழகா எனபதற்கு, அள்ளிக்கொள்ளத்தக்க பேரழகையுடையாய் என்பது பொருள்; பிரஸ்தாபப் பொருள்சாலமிகுமாயின் அதனை, அள்ளிக்கொள்ளுமியல்புடையதென விசேடிப்பதுண்டு; உண்டென்பதை "வெள்ளிக்குப்பாயம் போர்த்தெனப் பொதிந்த வெண்டிரு நீற்றொளிக் கதிர்கள் அள்ளிக்கொள் வினைய மேனியீர் கச்சபாலய மறைந்தனம்" எனக் காஞ்சிப்புராணம் சகோதர தீர்த்தப் படலம் முதற் செய்யுளிலும் "மழவிடையுடையான் மேனி வனப்பினை நோக்கி யச்சோ-அழகிய பிரானேயென்று வள்ளி முத்தங்கொண்டு" எனத் திருவிளையாடற் புராணத்திலும் "வள்ளைவிழை தெள்ளுகுழை யள்ளுமெழில் கிள்ளைமொழி வாய்ந்தபூங் கொம்பனையாய்" என மதுரை மீனாக்ஷியம்மை பதிகத்திலும் "அங்கியிற் றோன்றுநாளாயணியுட னள்ளிக்கொள்ளப் பொங்கிய விருளில்" எனப் பாரதம் கீசகன் வதைச் சருக்கத்திலும் சொல்லப்பட்டிருத்தலாலறிக.

சகத்திர நாமத்துள் ஒன்று.

எய்த்தடைந் தார்க்கெளி தாய்வந் தவாவிய தீதலினூற்
பெத்தமு முத்தியு மீயு முனக்கொரு பேர்பகவற்
பத்தி சுலபனென் றுயிரம் பேருட் பகர்ந்தனர்காண்
அத்தி முகத்த வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

இசையாத யான்மன மீர்க்கப்போய்ச் செய்தலி னெற்குற்றன
வசையாதனே சித்தசித்தெலாஞ்சேட்டித்து வைகினையோர்
விசையாதைநன் றிற்புக்கூன்றப்பாருன்னைவிநாவணுவும்
அசையா தெனுமோத் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

கக. எய்த்து அடைந்தார்க்கு - சோர்ந்தடைந்த அன்பர்களுக்கு. பெத்தம்-பந்தம். முத்தி-மோக்ஷம். "ஓம் பகவத் பக்தி சுலபாய நம:" என்பது விநாயக சகத்திர நாமத்துளொன்று; இதன்பொருள், தன்பாற் றெய்வ பக்தி செய்வோர்க்கு எளிதிலநுக்ரஹிப்பவனுக்கு நமஸ்காரமென்பதாம்; அத்தி-யானை.

உ௦. இதன்பொருள்-மனம் ஈர்க்க யான் போய் இசையாத செய்தலின் வசை யாதனை எற்கு உற்றன-என் மனமானது இழுத்துச்செல்ல அதனோடுடன்பட்டுச் சென்று நான் செய்யத்தகாதனவாகிய தீவினைகளைச் செய்தபடியாற் பழியுங் கடுந்துன்பமும் வந்து சேர்ந்தன. சித்து அசித்து எல்லாம் சேட்டித்து வைகினை-"விஞ்ஞாநமயம் ஆத்மா" என்று வேதத்தாற் கூறப்பட்ட ஆன்மாக்களாகிய சித்துப் பொருள்களும் பூதேந்திரிய காரணாதி அசித்துப்பொருள்களு மாகிய எல்லாவற்றுள்ளும் உண்ணின்றியக்கி யுடனுயுறைந்தனை. (ஆதலால்) அதை நன்றிற் புக்கு ஊன்ற ஓர் விசை பார்-உன்னாலியக்கப் படுமவற்று ளொன்றாகிய மனமென்னும் அதனை நல்வினைக்கட்புகுந்து நிலைபெற்றுத் தங்கும்படி ஒருதரம் நீ கடைக்கணித்தருள்வாயாக. ஒத்து உன்னை விநா அணுவும் அசையாது என்னும் - வேதங்களும் உன்னை

யல்லாமற் சடமாகிய அற்ப பதார்த்தமும் அசையமாட்டாது என்று முறையிடும் என்க. இசையாத-செய்யத்தகாதனவாகிய தீவினைகள்; இது வினையாலணையும் பெயர்; இப்பிரயோகத்தை நீதிநெறி விளக்கத்தில் "இசையாத போலினும் மேலையோர் செய்கை-வசையாகா" என வருமாற்றாலறிக. ஈர்த்தல்-இழுத்தல்; இதனை "இளையவ ளொருவன் றானே யொருவிசை யெறிந்தா னீர்த்தான்" எனத் திருவிளையாடற் புராணம் வலைவீசினபடலம் 56-லும் "நார்த்தொடுத் தீர்க்கிலெ னன்றாய்ந் தடக்கி லென்" என நாலடியாரிலும் வருமாற்றாலறிக. வசை-பழிச்சொல். யாதனை-கடுந்துன்பம்; இதனை "யாதநா தீவ்ர வேதநா" என்ற வடமொழி அமரவாக்கியத்தாலும் "கவ்வையா தனைப ழுங்கண் கையாறு நடலை பையுள்*****வெவ்விய கவலை தீய விழுமமா றேழுந் துன்பம்" என்ற சூடாமணி நிகண்டுச் செய்யுளாலும் அறிக. சித்து-சேதனப் பொருள்; அசித்து-அசேதனப் பொருள்; சேட்டித்தல் - உண்ணின்றியக்குதல்; கடவுள் சேதநாசேதனப் பொருள்களெல்லாவற்றுள்ளும் நின்றியக்குபவரென்பதை "சித்துட னசித்திற் கெல்லாஞ் சேட்டித ஞாத லானும்" எனச் சிவஞான சித்தியார் முதற் சூத்திரம்-56-லும் "பாடு திகழ்பாவை பல்லுயிரு மல்லனவும்-ஆடல்புரி விப்பா னருவுருவாய் நின்ற பரன்" எனக் கந்தபுராணம் காமதகனப்படலம் - 42 - லும் "எந்திரம்யா முண்ணின் றியற்றுகின்றாய் நீயன்றோ" என அடிமுடி தேடுபடலம்-89-லும் கூறுமாற்றா லறிக. ஓர் விசை-ஒருதரம்; விசை என்னுஞ் சொல் தரம் என்னும் பொருடரு மென்பதை, திருவிளையாடற் புராணம் வலைவீசின படலம்-56-ல் "இளையவ ளொருவன் றானே யொருவிசை யெறிந்தா னீர்த் தான்" எனக் கூறுமாற்றாலறிக. இச்செய்யுண் மூன்றாமடியில் அது என்னுஞ் சுட்டுப்பெயர் நீண்டு விகாரப்பட்டு [ஆது] என வந்தது; வருமென்பதை, உபதேசகாண்டம் திருமால் சிவார்ச் சனைச் சருக்கம்-15-ல் "ஆது கொடுநீ யசுரர்குல மனைத்து முடிவா

னமருடற்றித்-திது தீர்த்தி யெனவிரந்து செழுஞ்சே வடியின் முடிதாழ்ப்ப" என வருமாற்றலறிக. நன்று என்பது நல்வினை என்னும் பொருடருமென்பதை, "நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கால்-அல்லற் படுவ தெவன்" என்ற-379-ஆவது திருக்குறளானும் அதனுரையானும் அறிக. ஊன்றுதல்-நிலை பெற்றுத் தங்குதல்; இதனை, கம்பராமாயணம் மந்தரைசூழ்ச்சிப் படலம் - 40 - ல் "தோன்றிய கூனியுந் துடிக்கு நெஞ்சினள் ஊன்றிய வெகுளியாள்" எனவும், திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதியில் "ஊன்றுமலத் துகளகற்றி யுன்னருளும் பெறு வேனோ" எனவும் வருமாற்றலறிக. விநா என்பது, அல்லாமல் என்னும் பொருளைத் தரத்தக்க வடமொழி. கடவுளையல்லாமல் அணுவும் அசையமாட்டாதென்று வேதங் கூறுமென்பதை "தேந விநா த்ருணமபி நசலதி" என்னும் ஸர்வப்ரசித்த புராதநாரிய மஹா வாக்கியத்தாலும், சிதம்பர மாஹாத்ம்யம் இரண்டாவது அத்தியாயம் நாலாவது சுலோகத்தில் "த்ருணம்ச நசலத்யேவ பவச்சக்த்யா விநாசிவ" எனக் கூறுமாற்றாலும், கந்தபுராணம் காமதகனப்படலம்-40-ல் "எல்லார் செயலு மிறைவ னியற்று வதே-அல்லா திலையோ ரணுவுமசை யாதெவையும்" எனவும், தாயுமானசுவாமி பாடலில் "அவனன்றி யோரணுவு மசையா தெனும்பெரிய வாப்தர் மொழி யொன்று கண்டால்" எனவும், திருவருணைக் கலம்பகத்தில் "எல்லா வுயிர்க்கு முயிரு ணேச ரிவரசையின்-அல்லா தணுவு மசையாத தென்ப தறிந்தனமே" எனவும், விநாயக புராணம் விமலன் விநாயகருள் பெறுபடலம் 23-ல் "ஐந்து பூதமு மடிகளா ணையினசை கின்ற" எனவும் கூறுமாற்றாலும் அறிக. வேதத்திற்கு ஒத்து என்னும் பெய ருண்டென்பதை "மறப்பினுமோத்துக் கொளலாகும் பார்ப்பான்-பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்" என்ற-134-ஆந் திருக்குறளா லும், திருவோத்தூர் என்ற தலப்பெயராலும் அறிக.

ஆற்றுய்த் தவன்சுதவென் றுதுதித் துனை யர்ச்சித் துன்னல்
ஆற்றுதற் கின்றி யமையாக் கருவி யசலவறி
வாற்றவு முக்கிய மஃதிற்கங் கத்திண்மை யாதலினுல்
ஆற்றன்மூ ளாக்கிந் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
உக.

சிக்கிப் பவத்துழல் கின்ற விருதிணைச் சீவபுஞ்ச
வர்க்கத் திருநோய்க் கருண்மருந் தீயு மருத்துவனீ
உக்கத் திடஞ்சிர நிட்கம்பங் கைகா வுரமுபய
அக்கத் தெளிவிந் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
உஉ.

---

உக. ஆல் துய்த்தவன்-விடத்தையுண்டவன்; ஈண்டு ஆலம் என்னுஞ்சொல் அம் கெட்டு வந்தது, "ஆற்படு களத்தினு னிரதிக் காயெழின்-மேற்பட வெழுப்பிய வேளனுன்" என இரகுவம்மிசச் செய்யுளில் வந்தாற் போல. சுதன்-மகன். உன்னல்-தியானித்தல். ஆற்றுதற்கு-செய்தற்கு. அசலவறிவு-சலிக்காத திண்ணியவறிவு. ஆற்றவும் முக்கியம்-மிகவும் அவசியமாயுள்ளது. அங்கத்திண்மை-(தான் விளங்கிநிற்றற்கிடமாகிய) உறுப்பின் வல்லபம். ஆற்றல்-வல்லபம்.

உஉ. பவத்துச்சிக்கி-பிறவியின் மாட்டிக்கொண்டு, சிக்குதல் என்பது, மாட்டிக்கொள்ளுத லென்னும் பொருடருமென்பதை "திண்ணியநெஞ் சப்பறவை சிக்கக் குழற்காட்டிற்-கண்ணிவைப் போர் மாயங் கடக்குநா ளெந்நாளோ" எனத் தாயுமானசுவாமி பாடலில் வருமாற்றுலறிக. இருதிணை-உயர்திணையும் அஃறிணையும். புஞ்சம்-கூட்டம். இருவர்க்க நோய்-("புந்திக் கிலேசமுங் காயக்கிலேசமும் போக்குதற்கே" எனக் கந்த ரலங்காரத்திற் கூறிய) இரண்டு வகைப்பிணி. உக்கம்-இடை; இதனை "உக்கஞ் சேர்த்திய தொருகை" எனத் திருமுருகாற்றுப்படையிற் கூறுதலாலறிக. சிரநிட்கம்பம்-தலை நடுக்க மின்மை. உபய அக்கம்-இரண்டு கண்கள். மருத்துவன்-வயித்தியன். உரம்-வலிமை.

பகவசம் போவென் றுபாசித்துன் றுட்சேர் பாகதிக்கு
மிகவசம் பாவித முள்ள மெலிவொடு மெய்ம்மெலிவு
புகவசந் தாத்திர நைந்தது புந்திமெய் பூதிபுகுத்
தகவசப் பட்ட தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

தவமா நவர்கேட் டிடிற்சிரிக் கத்தகுந் தப்பிழைத்தேற்
கவமாந மில்லை யெலாமுணர் நின்மாட் டறைந்தழுதால்
உவமாந மில்பேதை யேற்கு முறுதுணை யுன்னருடான்
அவமான செய்தே னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

உச.

---

உ௩. அசம்பாவிதம் - சம்பவிக்கத் தகாதது; பொருத்த மில்லாத தெனினு மமையும். வசந்தாத்திரம் புக-காமபாணம் தைக்க. காமனுக்கு வசந்த னென்னும் பெயருண்டென்பதை "மான்மகன் மதனன் மகரக் கொடியோன், வேனிலாளி வில் வேள் வசந்தன்" என வரும் பிங்கலந்தைச் சூத்திரத்தாலறிக. புந்தி-புத்தி. மெய்-சரீரம். பூதி-நரகம். அகம்-பாவம்.

உச. மாநவர் கேட்டிடில் தவ சிரிக்கத் தகும் தப்பு இழைத் தேற்கு எல்லாமுணர் நின் மாட்டு அறைந்து அழுதால் அவமானம் இல்லை-மனிதர்கள் கேட்டவளவில் மிகவுஞ் சிரித்திகழத்தக்க கூடாவொழுக்கமாகிய தவறுச் செயல்களைச் செய்த எனக்கு, கட்டாகிய பாசத்தினது வன்மையுங் கட்டுண்ட பசுவினது மென்மையு மாகிய வெல்லாவற்றையு முணர்ந்த பதியாகிய உன்னிடத்தில் யான் செய்த தவறுகளைச் சொல்லியழுதால் அதனால் மாநஹீநம் வருவதில்லை என்க; தவறுசெய்த ஆன்மாக்கள் கடவுள் முன்னிலையில் மானத்தை விட்டு அவைகளைச் சொல்லி முறையிடுதல் பூர்வாசரணையென்பதை "ஏதமி லுயிர்த் தொகை யெவ்ற்றி னுக்குந்-தாதைதாயிமவரைத்தைய லாகுமாற்-கோதறு மிருமுது குரவர் மாட்டெவர்-மேதகு மானம்விட் டியம் பிடாதவர்" எனக் காஞ்சிப்புராணம் இரேணுகேச்சரப்படலத்திற்

முடிக்குந் துழாயன் பிரமன் வலாரி முனிவரையும்
நொடிக்குண் மயக்குபு பெண்முயக் காலுயிர் நுங்குமதன்
கடிக்கணை யாற்பொங்கு காமக் கடலைக் கடப்பதற்குன்
அடிக்கலம்வேண்டுமடியேன் றுயர்கெடுத்தாண்டருளே.

முன்னிலை தன்மை யுயிர்க்கூ றிலையென்று மூடத்தினுல்
நன்னிய மத்தைநீத் துத்திமை செய்தே னமன்கண்விடா
தென்னையுமாட்கொளிரங்கிப்பிழைபொறுத்தின்னருளுக்
கந்நிய மல்லே னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

உசு.

---

கூறுமாற்றாலறிக. உவமானம் இல் பேதை-இதரர்களுக்குள் எடுத்துக்கூற ஒருவரேனும் ஒப்புக் கிடைக்காத அறிவிலி என்க. அவம் ஆன-கேடுதருவனவற்றை என்க. தவ என்பது, மிகுதிப் பொருடருவதோருரிச்சொல்; இதனை "சால வுறுதவ நனிகூர் கழிமிகல்" என்ற நன்னூற் சூத்திரத்தாலறிக. மாநவர்-மனிதர். அவமாநம்-மாநஹீநம். நான் காமடியி லுள்ள ஆன என்பது, அஃறிணைப் பன்மை வினையாலணையும் பெயர்.

உரு. முடிக்குந் துழாயன் - விட்டுணு - வலாரி - இந்திரன். நொடி-கைந்நொடிப்பொழுது. பெண்முயக்கு-சையோகம். நுங்குதல்-உண்ணுதல். மதன்-மந்மதன். கடிக்கணை-வாசனையை வீசுகின்ற பாணம்; எனவே புஷ்பபாண மென்பது பெறப்படும். உன் அடிக்கலம் வேண்டும்-உனது திருவடிகளாகிய கப்பல் இன்றியமையாத வுறுதிப்பொருளாம்; தந்தருளுக வென்பது குறிப்பெச்சம்; கலம் என்னுஞ் சொல் கப்பலென்னும் பொருடருதலை "கலங்கள் சேர்கட லுகைக்கா ரோணனே" எனத் தேவாரத்திலும் "கலங்கவிழ்ந்த நாய்கன்போற் கையற்று மிகத்தளர்ந்து" என விநாயக புராணத்திலும் "வாழ்தலி னூதிய மென்னுண்டாம் வந்ததே-ஆழ்கலத் தன்ன கலி" என நாலடியாரிலும் வருமாற்றாலறிக.

உசு. முன்னிலையுயிர்-எதிர்முகமாய் நிற்கும் உயிர். தன்மை

விதிவிலக்கைக்கேட்டபோதோய்ந்து பின்பின்விலக்கில்விழு
வதுபேதை யேற்கியல் பாயிற்றை யையோ மதுநுகர்வோன்
இதுதீ தெனக்கேட்ட போதோய்ந்து பின்பழ கிச்சையெழின்
அதுநுகர் வொப்பாமடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
உஎ.

சகத்திர நாமத்துள் ஒன்று.

கடுவன காமா தியையுயிர்க் குப்போக்குங் காரணத்தாற்
சடுவ யிரிவற் கவித்துவஞ் சிப்பேர் சகத்திரத்துட்
படுவதொன் றுய்த்துனக் கவ்வாறை நின்வல்ல பத்தினுக்கே
அடுவது கூடு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. உஅ

---

யுயிர்-தன்கட்டங்குந்தன்மையையுடைய தனதுயிர். ஊறு-இடையூறு; வடு எனினுமமையும். மூடம்-அறிவின்மை. நியமத்தை நீத்து-முறைதவறி. தீமை-பாவம். அருளுக்கு அந்நியம் அல்லேன்-உனது திருவருளுக்கு யான் வேறல்லேன்; ஆன்மாவினிடத்திற் சூக்குமசித்தாய்ச் சிவமிருத்தல் நோக்கி, அந்நியமல்லேன் என்றது; இதனைச் சிவஞான சித்தியார் உரையிற் காண்க.

உஎ. ஐயையோ என்பது இரக்கச்சொல். மதுநுகர்வோன்-கட்குடிப்போன். இது, அது என்னு மிரண்டும் கள்ளைக் குறித்த சுட்டுச் சொற்கள். பழகு இச்சை-முன் பழகியதனாலுண்டாகிய ஆசை.

உஅ. கடு அன்ன-விடத்தை யொத்த. "ஷட்வைரிவர்க்க வித்வம்ஸிநே நம:" என்பது, விநாயக சகத்திர நாமத்துளொன்று; இதன் பொருள், காமக் குரோத லோப மோக மத மாச்சரியம் என்ற ஆறு பகைகளையும் ஒழிப்பவனுக்கு நமஸ்காரமென்பதாம். சகத்திரத்துள்-சகத்திர நாமத்துள். ஆய்த்து-ஆயது; இதனை "சகமதி லெலிதானன்றோ மாவலி யாய்த்துத் தானே" எனவும் "நாரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே" எனவும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தில் வருமாற்றா லறிக.

சகத்திர நாமத்துள் ஒன்று.

மாற்குப் பிறனிற் பிருந்தையென் பிற்புரண் மாலையறப்
போக்குமை தோட்கந்தத் தோரவ தாரம் புரிதலினீ
வாய்க்குஞ் சகத்திர நாமத் துமாங்க மலசனென்றோர்
ஆக்கியை நிற்குன் னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

உக. இதன் பொருள்-விட்டுணு மூர்த்திக்குச் சலந்தராசுரனென்னும் அயலானது மனைவியாகிய பிருந்தையின் தஹநமான எலும்பின்மேற் புரண்ட காமமயக்கத்தை முற்றக்கெடுத்த ஞானவுஷதமாகிய பார்வதி தோளிலணிந்துள்ள சந்தனக்கலவைக் கழிவினின்றும் நீ திருவருட்டிருமேனி கொண்டு முன்னொருகாலத்திற் றோன்றியபடியால் உனக்கேற்பட்ட சகத்திர நாமங்களுக்குள்ளே "உமாங்க மலசன்" என்ற ஒரு காரணப் பெயர் பொருந்திநிற்கும் என்பதாம். மால் - விட்டுணு - மால் - மயக்கம். அறப்போக்குதல்-முற்றக் கெடுத்தல். கந்தம்-சந்தனம். ஆக்கியை-பெயர்; இது ஆக்யா என்னும் வடமொழி. "ஓம் உமாங்க மலஜாய நம:" என்பது விநாயக சகத்திர நாமத்துள் ஒன்று; இதற்கு அர்த்தமென்னையெனில், உமையின் திருமேனி யழுக்கினின்றும் ஜனித்தவனுக்கு நமஸ்காரம் என்பதாகப் பெரியோர் கூறுவர். விட்டுணுமூர்த்தி பிருந்தா தஹந பஸ்மத்திலும் எலும்பிலும் புரண்டமையை "சொற்பயில் கமலைகேள்வன் சலந்தரன் றுணைவியாய-கற்பினிற் சிறந்த காமர் விருந்தையைக் காமுற் றன்னாள் பொற்புரு விழந்த வீமப் பொடியிடைக் கிடக்கின் றானல்" எனக் காஞ்சிப் புராணச் சலந்தரீசப் படலத்திலும், "இடுகாட்டுண் மாத ரெலும்பிற் புரண்மால்" என நால்வர் நான்மணி மாலையிலும் கூறுமாற்றாலறிக. அம்மூர்த்திக்குற்ற அம்மயக்கம் ஞான சொருபிணியாகிய உமாதேவி திருமேனியிலணிந்த சந்தனக் கலவைக் கழிவினழுக்கால் நீங்கினமையை "பாயபல் லுலகு மீன்ற பனிவரைப் பிராட்டி மேனிச்-சேயொளிக் கலவைச் சாந்தி னழுக்

மாரனை நீற்றலி னற்சிவ னேபெண் மயக்கிலியென்
றோருவர் தம்பதித் தேவருள் யார்க்கே னுமோர்சத்தியே
தாரந் தனையைதாய் தங்கையா யிற்றென்னு சைவமன்றி
ஆர்மத நூலு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௬௦.

---

கினைத் திரட்டி நல்கி-நீயிரிங் கிதனை யந்த நீற்றிடை வித்து வீரேல் - மாயவன் மயக்கந் தீர்க்கு மாங்கண்மூன் றுளவா மென்றாள்" எனவும் "கண்ணெதிர் தோன்றக் கண்டான் கரிய வன் மகிழ்ச்சி கொண்டான்" எனவும் "குன்றருங் கழுமனீங்கிக் குலவுதன் னிருக்கை சார்ந்தான்" எனவும் காஞ்சிப் புராணச் சலந்தரீசப் படலத்திற் கூறுமாற்றாலறிக. இதனால் மாயா நிவாரணவுஷதமான உமை தோட் கந்தத் தவதரித்த விநாயகாவ தாரமும், காரண காரிய முறையாற் பார்க்கும் போதும் எப்படிப் பட்ட மாயையையும் நிவாரணஞ் செய்யுமென்பது, மலைமேற் றீபம் போலத் தெள்ளிதிற் புலப்படும். இச்செய்யுண் மூன்றாம் அடி யெடுப்பிலுள்ள வாய்க்கும் என்பது, வினைமுற்றுச்சொல்.

௬௦. இதன்பொருள் - எல்லாவுயிர்கட்குங் காமவிகாரத்தை விளைவிக்கின்ற மன்மதனைச் சாம்பராக்கியதனாற் சிவபெருமா னொருவனே பெண்ணாசையற்றவ னென்று யாவரும் அறிகுவர்; (அதுவன்றியும்) ஆண்பெண்ணமைதித் தம்பதிகளாகிய * "அறு வகைச் சமயத் தறுவகையோர்க்கும்-வீடுபேறாய் நின்ற விண்ணோர் பகுதி" களுக்குள் யாரா மொருவர்க் காயினும், தம் பாங்கமைந்த ஒரு சத்தியே மனைவியாயும், மகளாயும், தாயாயும், தங்கையாயும் ஆயிற்றென்று சிவாகமாதி சைவசித்தாந்த மதநூல் சிவனுக்குக் கூறுதலையன்றி, வேறு எம்மதத்தர்களுடைய எந்தநூல்களுங் கூறாவாயின; என்பதாம். இதுவும் சிவன் மயக்கிலியென்றோர் வதற்கோ ரேதுவாமென்பது, குறிப்பெச்சம். பரசிவத்தினின்றும் பராசத்தி தோன்றுதலாற் சத்தியை மகளென்றும், பராசத்தி

---

* திருவாசகம் அகவல்.

முதலிய பஞ்சசத்திகளினின்றும் சிவசாதாக்கிய முதலிய ஐந்துந் தோன்றுதலாற் றாயென்றும், தோன்றிய சிவபேதங்களோடு அவ்வவற்றிற்குரிய சத்திபேதங்களா யிசைந்துநின்று உயிர்கட் குணர்வைப் பிறப்பித்தலான் மனைவியென்றும், சிவதத்துவம் முன்னுஞ் சத்தி தத்துவம் பின்னுமாகத் தோன்றுதலாற் றங்கை யென்றும் கூறுதல் சைவநூன் மரபாம்; மரபாமென்பதை 'வாயு மனமுங் கடந்த மனோன்மணி-பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை-ஆயு மறிவுங் கடந்த வனுக்குத்-தாயு மகளுநற் றாரமு மாமே" எனத் திருமந்திரத்திலும் "வாயி லானை மனோன் மணி யைப்பெற்ற-தாயிலானைத் தழுவுமென் னுவியே" எனத் தேவாரத்திலும் "எம்பெரு மானிம வான்மகட்குத்-தன்னுடைக் கேள்வன் மகன்றகப்பன் றமையனெம்மையன் றாள்கள்பாடி" எனத் திருவாசகத்திலும் "தவளத்த நீறணி யுந்தடந்தோளண்ண றன்னொருபா-லவளத்த னுமகனும்" எனத்திருக்கோவையாரிலும் "பிறைமுடி யவன்றா யாளுய் பின்பிறந் தவளுமானுய்-முறைமை யின் மகளுமானுய் முயங்கிடு மனையு மானுய்-மறைமுத லனைத்துந் தேறு வளங்கெழு செல்வி போற்றி" எனத் திருநாகைக்காரோ ணப்புராணத்திலும் "கனகமார் கவின்செய் மன்றில்-அனகநா டகற்கெமன்னை-மனைவிதாய் தங்கைமகள்" எனச் சிதம்பரச் செய்யுட்கோவையிலும் "அம்மனை யாயவர் தம்மனையானவ ளாடுக வம்மனையே - அழகு தழைந்தகல் யாண சவுந்தரி யாடுக வம்மனையே" என மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழிலும் கூறுமாற்றா லறிக. மேற்கூறிய தத்வத்தோற்றக்கிரமங்களை, முதனூலாகிய சிவாகமங்களினும் வழிநூலாகிய சைவசித்தாந்த சாத்திரங்களி லும் அச்சார்புடைய புராணங்களிலுங் காண்பதோடு, திருப் பெருந்துறைப் புராணத்தில் அநாதிமூர்த்தச் செயலுரைத்த படலம், சதாசிவமூர்த்தமுரைத்த படலம், மகேச்சுர மூர்த்த முரைத்த படலம், உருத்திர மூர்த்த முரைத்த படலங்களிலும் காணலாம்.

இந்திர சாலம் புரிபவ னுள்ளத் திருந்தெழும்பும்
மந்திர தந்திரம் போலுன் னருட்சத்தி வைகியெழும்
மைந்தா மருளகி லந்தரப் பெண்ணுய் மருவிற்று நூல்
அந்தரங் கம்மீ தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௬௧

---

௬௧. இதன் பொருள்-இந்திரசாலவித்தை செய்பவனுடைய உள்ளத்தின்கண் ணிருந்தெழும்புகின்ற அவ்வித்தைக்குரிய மந்திர தந்திரங்களைப்போல பஞ்சகிர்த்தியஞ் செய்பவனுகிய உனது திருவருட்சத்தி உன்பாலிருந்து அக்கிர்த்தியத்திற்கேற்ற வாறு வெளிப்படும்; உனது வல்லபமாகிய அருளானது செகத்தைத் தோன்றுவித்தற் பொருட்டாகப் பெண்ணுருவாய் உன் பாங் கமைந்தது; அமைந்ததென்னும் ஈது, நூலினது இரகசியக் கருத்தாகும் என்க. மைந்து-வல்லபம்; இதனைப் பிங்கலந்தை 1761 ஆம் சூத்திரத்திற் காண்க. அகிலம்-உலகம். மந்திரதந்திர வுவமை, சத்தி வெளிப்படுதன் மாத்திரைக்கேயாம். கடவுளின் பால் அவனதருளே செகத்தைத் தோன்றுவித்தற் பொருட்டுப் பெண்ணுருக்கொண் டெழுந்தருளிற் றென்பதை "மேனு ளகிலந் தா மெல்லியலா-ஆனுவரு டன்னை யளித்தொருபாற்-றுனுக விருத்திய தற்பரனை-நானுமயல் செய்வது நன்றிதுவே" எனவும் "மாதுமை வசத்தனுகி மருவுவா னென்றி யன்னுள்-நாதன தருளே யெல்லா நண்ணுவித் தருளும் வண்ணம்-பேதக மாகித் தானேர் பெண்ணுருக் கொண்டு மேவும்" எனவும் கந்தபுராணத் திலும் "உலகுயி ரின்பந் துய்ப்ப வுனதுபே ரருளை மாதென்-றிலகுற விடத்திருத்தி யிருந்திடுங் கருணைபோற்றி" எனத் திருக்கூவப் புராணத்திலும் "பணங்கிள ராரத் தார்பாற் பாவை யாய்ப் பயின்றுளேனும்-இணங்கருள் வாய்மை நாடா தணங் கென மதித்தோ ரெல்லாம்" என விநாயகபுராணம் வல்லபை கணேசர் திருவவதாரப் படலத்திலும் "இமவான் பெற்ற பெண் ணினைப் புணர்ந்துயிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்" எனச் சிவஞான சித்தித் திருவிருத்தத்திலும் "பாகமதி லுத்தமியை வைத்தல்பழு தென்றுய் - போகமுல குக்கருள் புரிந்தருள

வென்றே-மாகமுகி லொத்தகுழன் மங்கையொ டிருந்தான்" எனத் திருவாதவூரடிகள் புராணத்திலும் "இல்லாளி யாயுலகோ டுயிரை யீன்றிட்டெண்ணரிய யோகினுக்கு மிவனே யென்னக்-கல்லாவின் கீழிருந்த செக்கர் மேனிக் கற்பகமே" எனத் தாயுமானசுவாமிபாடல் ஆசையெனும்-24-லும் "தாயுந் தந்தையுமெனக்குற வாவதுஞ் சாற்றின்-ஆயு நீயுநின் னருளுநின் னடியருமன்றே" என ஆசையெனும்-20-லும் "அருட்டையல் ஓர்புறம் வாழ் சகநாதனே" எனப் பொன்னைமாதரை-59-லும் கூறுமாற்றாலறிக. வரம்பிலின்புடைய கடவுள் திருவருட்சத்தியோடிருப்பதானது, சுவயபோகப் பொருட்டன்றென்பதை "மெய்யுணர்வின்பச் சத்தியுஞ் சிவனும் விளைக்குமிவ் விளைவுக ளெல்லாம்-மையறத் தெளிந்தோர் திருவிளை யாட்டின் வண்மையென் றியம்புவர் மன்னோ" எனவும் "இற்றலாற்காமற் காய்ந்துமுற் றுணர்ந்து வரம்பிலின் புடையவீ சனுக்கும்-உற்றெவனுளதோ வவ்விளையாட்டு முலகெலா முய்யுமா றன்றே-அற்றென வுணராக் கயவர்கள் காமத் திறமெனக் கருதுவர்" எனவும் காஞ்சிப் புராணத்தில் வீராட்டகாசப்படலத்திலும் "பொங்கொளிப் பரமானந்தப் பூரண முதலே யிங்கு-நங்களை யாளத் தோன்றியைந்தொழி னடாத்த லோரேம்-மங்கையை மணந்தா யென்று மக்களை யுயிர்த்தா யென்றும்-எங்களி லொருவனாக வெண்ணியே யிகழ்ந்து கெட்டேம்" எனத் தக்கீசப்படலத்திலும் "யோக சாதனம் போகிகட் கின்மையிற்-செஞ்சடை விரித்து வெண்பொடி பூசி-யெருக்கங் கண்ணியுஞ் சூடி விருப்புடை-யிடப்பான் மடந்தை யொடிப்பொழுது தணப்பினும்-மடலூர் குறிப்புத் தோன்ற விடலருங்-காமமீ தூர வேமுற் றிரந்தவள்-தாமரைச் சேடி தைவந் தம்ம-புலவியிற் புலந்துங் கலவியிற் களித்தும்-போகமார்ந் திருப்பினு மிருக்கும் யோகிகட்கு-எய்தா வொண் பொருள் கைவந்து கிடைப்ப-ஞான முத்திரை சாத்தி மோன மொடு-யோகுசெய் திருப்பினு மிருக்கும்" எனத் திருவாரூர் நான்மணிமாலையிலும் கூறுமாற்றாலறிக. கடவுட் செயல்களுக்கு இந்திரசால வித்தையாடியின் செயல்களை யுவமையாகக்கொண்டு

கூடற் பதிநுந்தை மாபா தகற்கருள் கூர்ந்தெட்டெட்
டாடற் புராணஞ் சொலுமக னுநிற் கவன்குணமே
நாடப் பொலிதன் முறைநா னுயும்படி நல்கருணீ
ஆடற் புதத்த வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

கூற்றுவன் றண்டத்தை நூல்பார்க்கும்போ துகுலுங்குதுள்ளம்
சேற்றமுழ்த் துந்தீ வினையின் மற்றெக்காலுஞ் சென்றதுநற்
பேற்று வழியிற் புகுத்தெனைப் பேரரு ளோடளவில்
ஆற்ற லுடையா யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

௩௩.

---

"இந்திரசால விச்சை காட்டுவா னென்னத் தன்பாற்-செந்தழ லூட்ட மீன்ற செல்வனைக் கருப்ப மெய்தா-தந்தமி லுயிருஞால மனைத்தையு மீன்ற தாயாஞ்-சுந்தர வல்லி தன்பாற் றோன்றுமா றுள்ளஞ் செய்தான்" எனத் திருவிளையாடற் புராணத்திலும் "இந்திரசாலம் புரிவோன் யாவரையுந் தான் மயக்குந்-தந்திரத்துட் சாராது சார்வதுபோல்" எனக் கந்தர் கலிவெண்பாவிலும் கூறப்பட்டனவும் ஈண்டுச் சிந்திக்கற்பாலன.

௩௨. கூடற் பதி - மதுரைத் தலம். நுந்தை - உனது பிதாவாகிய சிவபிரான். எட்டெட்டு ஆடற் புராணம்-திருவிளையாடற் புராணம். நாடப் பொலிதல்-அனைவருங் காண விளங்குதல். முறை-கிரமமாகும். ஆடு அற்புதத்த-திருநிருத்தஞ் செய்கின்ற சிதம்பர க்ஷேத்திரத்தை யுடையாய்; அற்புதம் என்று சிதம்பரத்திற்குப் பெயர்; இதனை, கோயிற் புராணம் வியாக்கிர பாதச்சருக்கம் 29-தில் "சுத்தம் பர மற்புத மெய்ப்பதம்" எனக் கூறுமாற்றா லறிக.

௩௩. கூற்றுவன் தண்டம்-யம தண்டனை. குலுங்குதல்-நடுங்குதல். சேறு-ஈண்டுச் சேறு போல்வதாய நரகம். பேரருளுடைமையும், அளவிலாற்ற லுடைமையு மாகிய இரண்டும், கடவுட் கமைந்த எண்குணத்துள்ளன.

இந்திய மந்தக் கரணஞ் சடமென் றியம்பினநூல்
அந்தக் கருவி வசப்பட் டகிதத் தழுந்திற்றுயிர்
எந்தத் தொழிலும்வல் லாய்வசிப் பிக்கி னிதம்புகுங்காண்
அந்திச் சடைய வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

௬௪.

கற்பகத் தைச்சேர்ந் தவர்க்கது காஞ்சிரங் காயீந்ததேன்
முற்பவத் துச்செய்வினையெனுமௌவைமொழியெண்ணுதே
நிற்பதஞ் சார்ந்தும் பராமுக நீசெயிந் நேரநிலைக்
கற்பக லென்னெஞ் சடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

௬௫.

---

௬௪. இந்தியம்-பஞ்சேந்திரியங்கள். அந்தக் கரணம்-மனம் புத்தி சித்தம் அகங்கார மென்னும் நான்கு உட்கரணங்கள். சடம்-அசித்து. கருவி-துணைக்காரணம். அகிதம் - நன்மைபயவாத தீச்செயல்கள். வசிப்பிக்கின்-மேற்கூறிய மனமாதியை நீ வசப் படுத்தித் தந்தால் என்க; தாயுமான சுவாமி பாடல் ஆசை யெனும்-40-ல் "உன்னைநான் பிரியா வண்ணமென் மனமெனுங் கருவி-தன்னது வழியற் றென்னுழைக் கிடப்பத் தண்ணருள் வரமது வேண்டும்" என வேண்டியிருத்தலைப் பின்பற்றி இவ்வாறு வேண்டப்பட்டது. அந்தி - செவ்வானம். இந்திரியாதிகளைச் சடமென்று நூலியம்பியிருத்தலை "தத்துவ முப்பத் தாறுஞ் சைதன்னி யங்க ளைந்து-சித்தசித் தான்மா வொன்று முப்பது மசித்தே செப்பில்" என்ற சிவஞான சித்தித் திருவிருத்தத்தா லறிக.

௬௫. ஔவை மொழி-ஔவைப்பிராட்டியாராற் சொல்லப் பட்ட மூதுரை. நீ பராமுகம் செய் இந்நேர நிலைக்கு-நீபரா முகத்தைச் செய்கின்ற இந்தச் சமயநிலைமைக்கு. அற்புஅகல்-அன்பகன்ற; அற்பு வலித்தல் விகாரம்; அல் பகல் எனப் பிரித்து, இரவும் பகலுமெனப் பொருள் கோடலுமொன்று. "இமையளவு

சித்தியும் புத்தியு மாமிரு தாயர் சிசுப்படும்பா
டெய்த்துமெனைக்குறித் துன்பா லிரங்கென் றியம்பிலரோ
இத்தலக் காட்சி யனைகெஞ் சலுஞ்சே யியற்றுபிழைக்
கத்தர் சகிப்பு மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

௬௬.

---

முபகார மல்லால் வேறொன் றியக்காநற் குணக்கடலா யிருந்த வொன்றே" எனத் தாயுமான சுவாமி பாடலிற் கூறியபடி கடவுள் ஆன்மாக்களுக்குச் சற்றும் அபகாரஞ் செய்யார்; செய்யாரேனும், காமிக்கு, காமிக்கப்பட்டாள் யாதானு மொரு காரணங் குறித்துப் பாராமுகஞ் செய்தாளாயினும் ஒழியும்வரை காமமயக்க நீங்காமையின் அது இன்னாமையாகப்படுதல்போல, அடைய விரும்புஞ் சீவர்களுக்கு, விரும்பப்படுங் கடவுள் பக்குவ நோக்கிப் பாராமுகஞ் செய்தாராயினும் ஒழியும் வரை மாயாமயக்க நீங்காமையின் அது இன்னாமையாகப் படத்தக்கதாதலால், ஔவை மொழியெண்ணுதே யென முறையிடப்பட்டது; எண்ணுதே என்பது "இனியே தெனக்குனருள் வருமோ வெனக்கருதி யேங்குதே நெஞ்சமையோ" என்னுந் தாயுமான சுவாமி பாடலில் ஏங்குதே என்ற சொல்லைப்போலும்; கடவுளது உன்முகமே இனியதென்பதை "பாராயோ வென்னைமுகம் பார்த்தொருக்கா லென்கவலை-தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே" என்ற தாயுமான சுவாமி பாடல் விளக்கும். நீ பாராமுகத்தைச் செய்கின்ற இந்தச் சமயநிலைமைக் கெண்ணுதென்றதனால் அது, மிக அணுக்கத்தில் உன்முகமாகி அருள்செய்ய வேண்டுமென்னும் பிரார்த்தனையை உட்பொதிய வைத்ததுமாம்.

௬௬. சிசுப்படும்பாடு எய்த்தும்-குழந்தையாகிய அடியேன் படுந் துன்பத்தை யறிந்திருந்தும். அன்னை கெஞ்சலும் சேய் இயற்று பிழைக்கு அத்தர் சகிப்பும் இத்தலக் காட்சி-பிள்ளை செய்த பிழையைப்பற்றி அதனைப் பொறுத்தருளுமெனத் தாய்

நீறக் கவட மணிந்து துதித்து நினைமறவாப்
பேறெற் குதவித் திருவடி தாமெய் பிரிபொழுதில்
நூறு பிழைத்தே னெனினும் பொறுப்பது நுன்கடனே
ஆறக் காத்த வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

௬௭.

பாதகம் யாவும் புரிந்தேனின் சேவடிப் பற்றுமிலேன்
காதக னுமிய மன்வந் தெனைக்கலங் கச்செயுநாள்
மாதவ யோகர் மனமக லாத மலவயிரீ
ஆதவ தேச வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௬௮.

சுரத்தன் புளிஞ்சுவைத் துண்டல் சுவாபஞ் சுரமறினீங்
திரத்தல் செயினுமுண் ணுனது போ லுயி ரிச்சையுறிற்
பரத்துறற் குத்தடைப் போகத்தைப் பற்று மறினுவர்க்கும்
அரத்தனு கச்செய் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

மார்கள் வேண்டிக் கொள்ளுதலும், அவ்வாறே தந்தைமார்கள் பொறுத்தருளுதலும் இவ்வுலகிற் பிரத்தியக்ஷமாகும்.

௬௭. அக்கவடம்-உருத்திராக்க மாலை. மெய்-சரீரம். ஆறு அக்கரம்-ஷடாக்ஷரமந்திரம்.

௬௮. காதகன் - கொலைகாரன். மலவயிரி - பாசத்தின்கட் டணியாப் பகையையுடையோன்; ஈற்றெழுத்து விளியானீண் டது; இப்பெயர் கடவுட்குண்டென்பதை, சிவபுண்ணியத் தெளிவு-49-ல் "மலத்தி னாதி முத்தன்மல வயிரி யுறையுஞ் சிவலோக-தலத்திற் புகுந்து நலத்தகைய தலைவ ராகி நிலவுவ ரால்" எனக் கூறுமாற்றாலறிக. ஆதவதேசன்-சூரியப்ரகாசன்.

௬௯. சுரத்தன் - சுரநோயுடையவன். புளிஞ்சுவைத்து- புளிப்புச் சுவையையுடைய வுணவு. அறின் உவர்க்கும் - அந்த இச்சை தன்னை விட்டு நீங்குமாயின் போகத்தை வெறுக்கும் என்க. அரத்தன்-சிராசையுடையவன்; இது வடமொழி.

சம்போ சிவசிவ கற்பகப் பேரேக தந்தவிபோ
என்போர் தொடர்பில தீங்கிழைத் தேன்போமியவையெய்யேன்
முன்போத மின்மையி னிப்பேதை செய்பிழை முற்றும்பொறுத்
தன்போங்கக் கண்பார்த் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.௬௦.

ஓவச் சமனத் தநாசார கன்மத்தை யுன்னிச்செய்து
பாவச் சலதிவீழ்ந் தேறமாட் டாது பரிதபித்தேன்
கூவற் சரசிற் பயமறி யாது குதித்துழலும்
ஆவற்சம்போன்றேனடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

அறிவிற் சிறியேன்வீழ்ந் தாலளற் றீர்கேது வாவதிலே
அறிவிற் பெரியைநீ மீட்டுநன் றுய்க்கா தருட்கழகோ
அறிவித்தா லன்றி யறியாச்சித் தாவி யனைத்துளுநின்
றறிவிக்குஞ் சித்தே யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே

---

௬௦. விபோ என்பது, எங்கும் நிறைந்தவனே என்று விளிப் பொருடந்து நிற்கும் வடமொழி. போம் இயவை எய்யேன்-போகும் வழியை யறியேன்; இயவை-வழி; இதனைப் பிங்கலந்தைச் சூத்திரம் 479-திற் காண்க. எய்யாமை-அறியாமை; இதனை "இயங்கி யடாதென்பிர் நீயிரெய் யாமையென் றீவினையே" எனத் தணிக்கைப்புராணக் களவுப்படலச் செய்யுளிற் கூறுமாற் றாலும் "எய்யா மையே யறியா மையே" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தாலும் அறிக.

௬௧. அச்சம் ஓவு மனம்-அச்சம் நீங்கிய மனம். அநாசார கன்மம்-செய்யத்தகாத தீவினை. சலதி-கடல். கூவல்-கிணறு. சரசு-தடாகம். உழலுதல்-தடுமாறித் திரிதல். ஆ வற்சம்-பசுவின் கன்று; "மழவிளங் கன்றுபோல வளர்பய மறிந்தா யில்லை" என்ற விநாயக புராணத்துண்டி விநாயகாவதாரப்படலச் செய் யுளும் "இளங்கன்று பயமறியாது" என்ற உலகப் பழமொழியும் ஈண்டுச் சிந்திக்கற்பாலன.

௬௨. அறிவிற் சிறியேன்-கிஞ்சிஞ்ஞனாகிய நான். அளற்றிற்கு

ஏது ஆவதிலே வீழ்ந்தால்-நரகத் துன்பத்திற்கேதுவாகிய பாவச் செயலின்கண்ணே யமிழ்ந்தினேனுனல். அறிவிற் பெரியைநீ-சர்வஞ்ஞனுகிய நீ. மீட்டு நன்று உய்க்காது அருட்கு அழகோ-அடியேனை அப்பாவத்தைச் செய்யாதபடி திருப்பி நல்வினையிற் புகச் செலுத்தாமலிருப்பதானது, உனது பேரருளுக்கு அழகாகுமா? அறிவித்தாலன்றி அறியாச் சித்து ஆவி அனைத் துள்ளும் நின்று அறிவிக்கும் சித்தே - உன்னின்றிறைவ னறிவித்தா லல்லாமற் ருனே யறியமாட்டாத தூலசித்தாகிய சீவகோடிக ளெல்லாவற்றுள்ளும் நிறைந்து நின்றறிவிக்கின்ற சூக்குமசித்தாயுள்ளவனே என்க. அளறு என நரகத்திற்குப்பெய ருண்டென்பதையும், நன்று என நல்வினைக்குப் பெயருண்டென் பதையும் "உண்ணுமையுள்ள துயிர்நிலை யூனுண்ண-வண்ணுத்தல் செய்யா தளறு" எனவும் "நன்ருங்கா னல்லவாக் காண்பவ ரன்ருங்கா-லல்லற்படுவதெவன்" எனவும் வருந் திருக்குறளினும் அவற்றுரைகளினும் காண்க. ஆவி-சீவன். சீவகோடிக ளெல்லாம் அறிவித்தா லறியுஞ் சித்தாகவும் சிவன் ஒருவனே அறிந்து அறி விக்குஞ் சித்தாகவும் இருத்தலை "சிவன் சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்ரு மென்னிற் சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்ருன்-பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற் படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்ருன் - அவன்ருனே யறியுஞ்சித் தாதலினு லிரண்டும் அணைந்தாலு மொன்ருகா தநி யமா யிருக்கும்" எனவும் "ஆன்மாக்க ளனைத்து மெங்குஞ்-செறிதரு சிவன்ற னுலே யறிந்திடுஞ் சிவனைக் காணு-அறிதருஞ் சிவனே யெல்லா மறிந்தறி வித்து நிற்பன்" எனவும் "அறிந்திடு மான்மாவொன்றை யொன்றினு லறித லானும் - அறிந்தவை மறத்த லானு மறிவிக்க வறித லானும்-அறிந்திடுந் தன்னை யுந்தா னறியாமை யானுந் தானே-அறிந்திடு மறிவ னன்ரு மறிவிக்க வறிவ னன்றே" எனவும் சிவஞான சித்தியாரிலும் "அறிவித்தா

பாவம் வராவகை முன்னிலை தன்மை படர்க்கையெனும்
மூவிட நிற்றி தடுத்திலை யேலது மூண்டளற்றின்
மேவுவிக் கும்முணர் வும்போ மசாத்திய மேலிவர்வ
தாவதுன் பாற்றே னடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

பஞ்சேந் திரிய வசப்பட் டநுதினம் பாதகத்தைச்
சஞ்சேப மின்றாற் றலினுமா னேன்பர தந்திரனாய்
உஞ்சேறும் வன்மை யெனக்கிலை யீர்த்தெனை யுன்வசனுக்
கஞ்சேலென் றோதியடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

சச.

---

லறியு மாவி யதினன்றிப் பதியிற் சாராச் செறிவுற்று" என விநாயகபுராணம் தூர்வையாசகப் படலத்திலும் "அறிந்துயிர்க்கறி விப்பது பதியறி வித்தால்-அறிந்து நிற்பது பசுவது சிவத்தடை யாமைச்-செறிந்து வையகத் துய்ப்பது ஆணவத்திரள்" எனத் தணிகைப்புராணம் நந்தியுபதேசப் படலத்திலும் கூறுமாற்று லறிக. "ஊனென்றி நாத னுணர்த்துமதை விட்டறிவேன்-நானென்ற பாவிதலை நாணுநா ளெந்நாளோ" என்ற தாயுமான சுவாமி பாடலும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

சங. அது மூண்டு அளற்றில் மேவுவிக்கும்-மேற்சொன்ன பாவம் ஆகிய அது விர்த்தியாகி நரகத்திற் புகுத்தும்; அது, பாவத்தைக்குறித்த சுட்டுப்பெயர்; அளறு-நரகம்; இதனை "அண்ணாத்தல் செய்யா தளறு" "பூரியர்க ளாழு மளறு" எனத் திருக்குறளில் வருமாற்று லறிக. மேல் இவர்வது அசாத்தியம்-உயர்ந்தாரொடுங் கூடி மேலேறுதல் முடியாதகாரியமாம் என்க. ஆவ என்பது ஐயோ என்பதைப்போன்ற இரங்கற் குறிப்புச்சொல்; இதனை "ஆவ வென்னு மழுஞ்சிவ தாவெனும்" எனத் திருவிளையாடற் புராணத்தில் வருமாற்று லறிக.

சச. சஞ்சேபம் இன்று-சுருக்க மின்றி; இன்றி என்னும் வினையெச்சத்தின் இகரம் "அன்றி யின்றியென் வினையெஞ்

உடங்காப் பிறந்த மனம்பொறி மீறித்திங் குய்த்ததெனை
அடங்காதா ரார்நீ யடக்குவித் தாலென்ற வப்பருரைத்
திடங்காட்டநின்னையுற்றேனவற்றைநன்கிற்சேர்த்துனக்குள்
அடங்காதா ரில்லை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.
சரு.

---

சிகரம்-தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே" என்ற நன்னூற் சூத்திர விதிப்படிக்கு உகரமாய் வந்தது. உய்ந்து என்னும் வினையெச்சம் உஞ்சு எனப் போலியாய் வந்தது; "உஞ்சன னினியென வோத வொல்லையில்-நஞ்சணி மிடற்றினன் மறைந்து நண்ணினன்" எனக் கந்த புராணத்திலும் "உஞ்சே முஞ்சேமெனவுவப்ப வுற்று னனலா சுரன்றனையே" என விநாயக புராணத்திலும் வந்தாற் போல. பாதந்திரம்-ஐண்டுப் பஞ்சேந்திரிய வசப்பட்டதனாலே நேர்ந்த சுதந்திரஹீநம்.

சரு. உடங்காப்பிறந்த மனம் பொறி-உடலெடுத்த பொழுதே கூடப்பிறந்தவைகளான மனமும் பஞ்சேந்திரியங்களும்; என்க. மனம் உயிருடன் கூடப்பிறந்த தென்பதனை "எந்நாளு முடலிலே யுயிரா முனைப்போ விருக்கவிலை யோம னமெனும் யானுமென் னட்பாம் பிராணனும்" எனவரும் தாயுமான சுவாமிபாடலாலறிக. பஞ்சேந்திரியமும், கூடப்பிறந்துந் துன்மார்க்கத்தி லுய்க்கும் பகைகளாதலை "இவ்வரும் பிறவிப் பௌவநீர் நீந்து மேழையேற் கென்னுடன் பிறந்த-ஐவரும் பகையே யார்துணை யென்று லஞ்ச லென்றருள் செய்வான் கோயில்" எனத் திருவிசைப்பாவிலும் "அரிச்சி ராப்பக லைவரா லாட்டுண்டு" எனத் திருச்சிராப்பள்ளித் தேவாரத்திலும் "இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்" "ஆனை வெம் போரிற் குறுந்தூறெனப் புலனால் அலைப்புண்டு" "எறும்பிடை நாங்கூழெனப் புலனால் அரிப்புண்டு" எனத் திருவாசகத்திலும் "ஐவரென்ற புலவேடர் கொட்டமது அடங்க" எனத் தாயுமானசுவாமி பாடலிலும் "ஓவொட்

மிடற்கொள் சுராசுரர் மந்தர மத்தால் விடவெயிற்றுப்
படக்கயி றிட்டு மதித்தமு தங்கொள் பயோததியை
மடக்கி யுழக்கி யுயிர்க்கிடர் செய்திரு மார்பவுறுப்
படக்கி யடக்கி யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

டாரொன்றை யுன்னவொட் டார்மல ரிட்டுனைதாள்-சேரவொட் டாரைவர் செய்வதென் யான்" எனக் கந்தரலங்காரத்திலும் "இருகால் சுமந்த வொருபெருஞ் சேவகத்து-ஐம்புலக் களிறுந் தம்புலத் திழுப்ப" எனப் பண்டாரமும்மணிக்கோவையிலும் கூறுமாற்றுல் அறிக; மனமும் பொறிகளும் கடவுள் ஆட்டுவிக்க ஆடுவனவென்பதை "பொல்லாத என்னெஞ்சம் ஒரைந்து புலன் கடம்பால் அல்லாது அரைமாத்திரையும் நின்னடிக்கண் அன்பாய் நில்லாது இதற்கு என்னை செய்கேன் இதை நின்றிடென்றே சொல்லாய் திருத்தில்லையுண் மேவிய சோதிநீயே" என வைராக்கிய சதகத்திலும் "ஒட்டுவிக்கக் கூட்டினைவிட் டோடும்பொறி யரவைங்-தாட்டுவிக்குஞ் சித்தர்நீர்" எனச் சிதம்பர மும்மணிக் கோவையிலும் கூறுமாற்றுல் அறிக. அப்பர் திடவுரை காட்ட-திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்துள்ள "ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே அடக்குவித்தா லாரொருவ ரடங்காதாரே" என்ற தேவாரமாகிய உறுதிமொழியானது அவைகளை யடக்கித்தரத்தக்க சர்வவல்லபமுடையவன் நீ யென்றுன்னைச் சுட்டிக் காண்பிக்க. உரைத்திடம் என்பதை, திடவுரை என மாற்றிக்கொள்க. தீங்கு-துன்மார்க்கம். நன்கு-சன்மார்க்கம். சேர்த்து என்பதற்கு, சேரச்செய் தருள் என்பது பொருள்.

சசு. மிடல்-வலிமை. மந்தரம்-மந்தரமலை. விடவெயிற்றுப் படக்கயிறு-விடம் பொதிந்த பற்களையும் படத்தையு முடைய வாசுகிப்பாம்பாகிய நாண். மதித்தல்-கடைதல். பயோததி-பாற் கடல். மடக்குதல்-போய்ப்போய் மீளுதல். திருமார்ப உறுப் படக்கி அடக்கி-இலக்குமி தங்கிய மார்பையுடைய விட்டுணு

மருட்கு ளடங்காத குற்றமு மில்லைகைம் மாறற்றநின்
அருட்கு ளடங்காத தண்டமு மில்லையான் மாவைப்பற்றும்
மருட்குறு மாற்றலெம் மைத்தீங் குறுத்துதன் மாற்றலன்றோ
அருட்குறு மாற்ற லடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

சஎ

பொல்லாங்கு பின்றுன் புறுத்துமென் றோர்ந்தும் புரிந்தனன்றுப்
பில்லா வறிவாலஃ தைப்புத்தி பூருவ மென்றுகொளா
தெல்லா முணர்ந்தநீ மன்னிக்க வேண்டுமெற் கில்லையுனை
யல்லாற் களைக ணடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

மூர்த்தியாகிய ஆமையை யடக்கினவனே என்க; விட்டுணு மூர்த்தி பாற்கடல் கடைய எடுத்த கூர்மாவதாரத்தில் அகந்தை கொண்டு பல்லுயிரும் இடர்ப்படக் கடலைக் கலக்கியதைக் கண்டு பிரமாதி தேவர்களெல்லாம் பிரார்த்தித்து வேண்டுதலும் சிவ பெருமான் அதை நீ தவிர்த்து உலகத்தை இரக்ஷியென்று சொல்ல, விநாயகப்பெருமான் கூர்ம ஸம்ஹாரஞ் செய்து அந்த ஆமை யோட்டைத் தமது பிதா மார்பிலணியக் கொடுத்தனர்; இச் சரித்திரத்தை "ஈதெ டுத்திரந் தேத்தினர் வானவர், மாத டுத்தமருங்குடை வானவன், போத டுத்த புகர்முகப் பிள்ளையை, நீத டேத்தி கொலென்று நிகழ்த்தினுன்" என்பதும் "கோடுகுத் திக்கமடங் குடைந்ததன், ஒடு தந்தைக் கடியுறை யுய்த்தனன்" என்பதும் ஆதியாக உபதேச காண்டம் கூர்மாவதாரச் சருக்கத் தில் 97-முதல் 102-வரையினும் வருஞ் செய்யுட்களிற் காண்க. இச்சரித்திரம், காஞ்சிப் புராணத்திலு முண்டு.

சஎ. மருள்-அஞ்ஞானம்; இதனை "இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி-மாசறு காட்சியவர்க்கு" என்னுந் திருக்குற ளுரையிற் காண்க.

சஅ. துப்பில்லாவறிவு-அசுத்தவறிவு; துப்பு-சுத்தம்; இதனை

பூசா கிரியை மநோலயத் தோடு புரிந்தறியேன்
கூசாமற் றீமை நிசிட்டமென் றோர்ந்துங் குயிற்றினன்பின்
நோசாரு மவ்வினைக் கீடாயென் றஞ்சி நுனையடைந்தேன்
ஆசா னதர்செய் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

சசு

செய்யாத் தகையுற்றுஞ் சொல்லிக் கழிப்பதைச் சிந்தித்துன்பாற்
பொய்யாப் புலவர் புரைசெய்த தாமுன் புகன்றுளர்பா
மெய்யாநான் செய்தல் வியாபித்த நிற்கு விளங்கத்தக்க
தையாநீ மன்னித் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

"அரக்கும் பவளமு மாயுதப் பொதுவுந்-துணையும் வலியும் பொலிவு செய்யு-மநுபவமுந் தூய்மையுந் துப்பென லாகும்" என்ற பிங்கலந்தைச் சூத்திரத்திற் காண்க. புத்தி பூருவம்-தெரிந்து செய்யப்படுவது. களைகண்-ஆதாரம்; இதனை "விடுவதையின்றி வேறு களைகணு மின்றி வீயக்-கடவனைக் காப்பதன்றோ காப்பென் றான் கருணைமூர்த்தி" என்ற திருவிளையாடற் புராணச் செய்யுளிற் காண்க.

சசு. நிசிட்டம்-விலக்கு; இதனை "மிகத் தெளிந்தா ரோதி விதிநிசிட்ட மெல்லாம்" எனவருஞ் சைவசமயநெறிக் குறளிற் காண்க. குயிற்றுதல்-செய்தல். நோ-துன்பம். ஆசு ஆனு அதர் செய்து-அக்குற்றங் கெடத்தக்க மார்க்கத்தைச் செய்து என்க; ஆசு-குற்றம்; ஆனுதல்-கெடுதல்; இதனை "ஆனு வமுதே யயில்வே லரசே" எனவருங்கந்தானுபூதிச் செய்யுளாலறிக; அதர்-மார்க்கம்; இதனை "ஆக்க மதர்வினுய்ச் செல்லும்" என வருந் திருக்குறளாலறிக.

சஎ. பொய்யாப் புலவர்-மெய்ஞ்ஞானிகள். புரை-குற்றம். வியாபித்த நிற்கு-எங்கு நிறைந்த வுனக்கு.

அடங்காப் பிழையைப் புரிவது நாங்களஞ் ஞானத்தினல்
அடங்காப்பிழையைப்பொறுப்பதுநீயுன் னருட்பெருக்கால்
அடங்காப் பிழையருட் காவா திதுவரைக் காரைவிட்டாய்
அடங்காப்பிழையேனடியேன் றுயர்கெடுத்தாண்டருளே.
௬௧

தந்தா வளமுக கற்பக தில்லைத் தலத்தின்முன்னீ
சிந்தா குலப்பிணி தீர்த்தெனை யாண்டது செப்புமதோ
நந்தாக் கருணை நலத்தா லடியே னவின்றவெண்பா
அந்தாதி யுங்கொண் டடியேன் றுயர்கெடுத் தாண்டருளே

ஆற்றவக் கோலக் குருவருள் சேர்சந காதியன்னோர்
ஆற்றுவர் நோன்பைய் யெரிநண் ணிரசனத் தாண்டுபல
ஆற்றநொய் யேனஃதை யோர்ந்தென் னெளிதுய் யதாப்புகுத்தி
ஆற்றல் செயத்தந் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

௬௧. அடங்கா என்பவைகட்கு, கணக்கிலடங்காத வெனப் பொருளுரைக்க. நாங்கள் என்பது, பசுவர்க்கங்களை யுளப்படுத்திக் கூறிய தன்மைப் பன்மைச் சொல்.

௬௨. தந்தாவளம்-யானை. சிந்தாகுலம்-மனவருத்தம்; இது வடமொழி; "சிந்தாகுல வில்லொடு செல்வமெனும்-விந்தாடவி யென்று விடப்பெறுவேன்" எனக் கந்தரநுபூதியில் வந்திருப்பதூஉங் காண்க. செப்புமதோ என்பதற்கு, சொல்லுமளவிற்றோ என்பது பொருள்; இதனை "ஆதாளியை யொன் றறியேனை யறத்-தீதாளியை யாண்டது செப்புமதோ" எனக் கந்தரநுபூதியில் வருதலாலறிக. நந்தா-கெடாத. அடியேன் நவின்ற வெண்பா அந்தாதியும் கொண்டு-அடியேன் உன்றிருவடிக்குப் பாடியணிந்த "இல்லைக் கற்பக விநாயகர் வெண்பா வந்தாதி" என்னும் பிரபந்தத்தையும் ஏற்றுக்கொண்டு என்க.

௬௩. ஆல்-கல்லாலவிருக்ஷம். தவக்கோலக்குரு - தக்ஷிணா

உன்வய மாயன் புறிற்றீ தெனையொறுக் காதகற்றல்
என்வய மன்றென் பதையறி வோமிரு வேமும்வினை
யின்வயத் தெய்தினும் போக்கும் பொறுப்புன தேயருளை
அன்வய மாக்கி யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.ருச

தோற்றத் துயரினு மெண்மடங் காஞ்சாந் துயரெனநூல்
சாற்றிற் றறன்கடை செய்தே னதையுஞ் சகித்தருளிக்
கூற்றுறுங் காற்றடுத் தஞ்சலென்றுட்கோடி கூற்றொறுத்தால்
ஆற்றேனிற் கோல மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

மூர்த்தி. ஆற்றுவர்-செய்வர். நோன்பு-தவம். ஐவரிகள்-பஞ்சாக்கி மத்தியில். நிர் அசனம் - ஆகாரமின்மை. ஆற்ற நொய்யேன் அஃதை ஓர்ந்து என்-மிகவும் மென்மையுடையேனுகிய யான் உன்னருள்வன்மையுடையார்செய்யும்அச்செயலை எண்ணி ஆவ தென்னை (ஆதலால்) எளிது உய் அதர் புகுத்தி-எளிதாயுய்யத்தக்க வழியில் அடியேனைப் புகுவித்து. ஆற்றல்-வல்லபம். அதர்-வழி. இதனை "ஆக்க மதர்வினுய்ச் செல்லும்" எனத் திருக்குறளில் வருமாற்றாலறிக.

ருச. தீது-பாவம்; இதனை "உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக், கள்ளத்தாற்கொள்வே மெனல்" என்னுந் திருக்குறளுரையிற் காண்க. ஒறுக்காது - வருத்தமாட்டாது; ஒறுத்தல்-வருத்துதல்;இதனை"ஒறுக்கு மதுகை யுரனுடையாளன், பொறுக்கும் பொறையேபொறை" என நாலடியாரிற் கூறுமாற்று லறிக. அன்வயம் ஆக்கி-சம்பந்தப் படுத்தி; அன்வயம், வடமொழி.

ருரு. தோற்றத்துயர்-பிறவித்துன்பம்; சாந்துயர் - இறவித் துன்பம்; பிறவித்துன்பத்தினின்றும் இறவித்துன்பம் எட்டுப்பங் கதிகமென்பதை "இந்தமா விறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்மடங்கே" என வைராக்கிய சதகம் 11-வது செய்யுளுரை யில் உதாரணங் காட்டியுள்ள பெருந்திரட்டுச் செய்யுளிற் கூறு

பந்த ரிடர்களை யென்ன நெடுங்களப் பாடலிலுன்
தந்தை களைந்தன ளூற்றலன் பாளர்பாச் சாற்றுமவர்
எந்த வகையிலு மேழை யடியே னிலைதுணையே
றந்தண நாத வடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ருசு.

மாற்ருலறிக. அறன்கடை-பாவம்; இதனை "அறன்கடைநின்ருரு ளெல்லாம் பிறன்கடை - நின்ருரிற் பேதையாரில்" எனத் திருக் குறளில் வருமாற்ருலறிக. கூற்று-இயமன். கோடி-கொள்ளுதி. கூற்று ஒறுத்தால் ஆற்றேன்-இயமன் வருத்தப்படுத்திஞல் அதனை அடியேன் பொறுக்கமாட்டேன். ஓலம் என்பது-இடருட்பட்டார் அபயம் பெற விரும்பி முறையிடுஞ் சொல்; இதனை "நண்ணினர்க் கினியா யோல ஞானநா யகனே யோலம்" எனக் கந்தபுராணத் தில் வருமாற்ருலறிக.

ருசு. பந்தர் - திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்; மேற் கண்ட சுவாமிகளுக்கு நாமேகதேசத்தாற் பந்தரென்னும் பெயரு முண்டென்பதை "பாதத்தினின் மனம் வைத்தெழு பந்தன்றன பாடல்" என வேணுபுரத் தேவாரத்திலும் "பந்தனுரை செய் தமிழ்கள் பத்துமிசை கூர" எனத் திருப்புகலித் தேவாரத்திலும் கூறியிருப்பனவாதியாகப் பல பதிகங்களில் வருமாற்ருலறிக. நெடுங்களப்பாடல்-மேற்கண்ட சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருநெடுங்களத்தலத் தேவாரப்பதிகம்.பாச்சாற்றும் அவர் ஆற்றல் அன்பாளர் - அப்பதிகம்பாடிய அச்சுவாமிகள் நிக்ரஹாநுக்ரஹ சக்தியும் போன்புமுடையார். அடியேன் எந்த வகையிலும் ஏழை- அடியேனுகிய யான் ஆற்றல் அன்பு முதலிய எந்த வர்க்கத்திலும் இலனுவேன். அந்தண நாத - அழகிய தண்ணளியையுடைய கர்த்தனே என்க.

தண்டிக்கத் தக்க பிழைபுரிந் தேன்வேறு சார்புமிலை
தண்டம் பிழைக்கு விதித்த படிசெயிற் ருங்கலன்யான்
தண்ட தரனுல கிற்புகா மற்றடுத் தாட்கொள்ளென
அண்டின னுன்னை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

முறைப்படச் சூழ்ந்து முடிவில வேசெய்வர் மூதறிவின்
திறப்பா டிலாதவ ரென்ற குறட்போற் றிருவருளின்
துறைப்புகு வேனெனச் சூழ்ந்தென் மனமுடி விற்புக்கதால்
அறப்புறக் கன்மத் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ருஅ

சருவ வியாபக சோதி சொரூப னுனைத்தடத்தம்
மருவுவித் தாணவ கேவலத் துற்றவான் மாக்களெமை
ஒருவா றறியமெய் யீந்து சகலத்தி லுய்த்ததுமுன்
அருள்செய்த வேலை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

ருஎ. தாங்கலன்-பொறுக்கமாட்டேன். தண்டதரன-யமன். அண்டினன்-சரணமடைந்தேன்.

ருஅ. இச்செய்யுள், 640-வது திருக்குறளை வைத்தோதப் பெற்றது. அறப்புறக்கன்மம்-புண்யத்திற்குப் புறம்பாய பாவத் தொழில்.

ருகூ. சொரூபம்-சொரூபநிலை; அஃது, கடவுளுக்குத் தன் னியல்பினிற்றலாகிய சிறப்பியல்பு. தடத்தம்-தடத்த நிலை; அஃது, கடவுளுக்கு ஐந்தொழில் செய்யும் நிலையினிற்றலாகிய பொது வியல்பு. கேவலம்-கேவலாவத்தை; அஃது, ஆன்மா இச்சாஞானக் கிரியைகளினிகழ்ச்சி சிறிதுமின்றித் தான்மாத்திரையாய் ஆணவ மலத்தோடு வியாபித்து நிற்கும் நிலை; சகலம்-சகலாவத்தை; அஃது, கேவலாவத்தையைப் பொருந்திநின்ற ஆன்மா கடவுளாற் றாப்பெற்ற தநுகரணாதிகளோடுங்கூடித் தன்னிச்சாஞானக் கிரியைக ளொருபுடைவிளங்கப் பிறந்திறந்து திரியும் நிலை;

மகத்தா மறைத்தத் துவமசி யாற்சந் மயனுகுநான்
மிகச்சிறி தான்மாச் சுதந்திர ஞத்தனை மெச்சிடுநான்
மகத்தாஞ் சிவோக மெனுநானுட் சிக்குவந் தாற்சிறிய
அகத்தநா னிற்கா தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

ஆன்மாவின் கேவல சகல நிலைகளை "அறிவிலனமூர்தத னித்த னாகாதி குணங்க ளோடுஞ்-செறிவிலன் கலாதி யோடுஞ் சேர் விலன் செயல்க ளில்லான்-குறியிலன் கருத்தா வல்லன் போகத் திற் கொள்கை யில்லான்-பிறிவிலன் மலத்தி னேடும் வியாபிகே வலத்தி லான்மா" எனவும் "உருவினைக் கொண்டுபோக போக்கி யத் தன்னல் செப்பல்-வருசெயன் மருவிச் சத்த மாதியாம் விடயர் தன்னிற்-புரிவதுஞ் செய்திங் கெல்லா யோனியும் புக் குழன்று-திரிதருஞ் சகலமான வவத்தையிற் சீவன் சென்றே" எனவும் வருஞ் சிவஞான சித்தித் திருவிருத்தங்களிலும் அவற்றுரைகளிலுங் காண்க. மெய்-சரீரம். உன்னைமருவுவித்ததும் எம்மையுய்த்ததும் ஆகிய இரண்டும், உன்அருள் செய்த வேலை யாகும் என உரைக்குக.

௬௦. இதன் பொருள். - ஆன்மா மறைத் தத்துவமசியாற் சர்மயன் ஆகும் நான் மிக மகத்து ஆம்-சிவஞானவன் வேதத்திற் கூறப்பட்ட தத்துவமசி மகாவாக்கிய வாசனையாற் றன்னைச் சிவமயனெனப் பாவித்தலாலாகிய நானென்பதானது, மிகவும் பெரியதாகும். ஆன்மா தனைச் சுதந்திரனு மெச்சிடும் நான் மிகச் சிறிது ஆம் - சிவஞானவன் அணவமல வாசனையாற் றன்னைத் தன்வயத்தனுகக் கொண்டாடுதலாலாகிய நானென்பதானது, மிகவுஞ் சிறியதாகும். (மேற்கூறிய நானென்னுமிரண்டனுள்) மகத்து ஆம் சிவோகம் என்னும் நான் ஆட்சிக்கு வந்தால் சிறிய அகத்த நான் நிற்காது-பெரிதாகிய சிவோகம் பாவனை யென்கின்ற நானென்பதானது அநுபவத்துக்கு வந்து

விடுமாஞல், அதன் எதிரில், சிறிய சீவனதகம்பாவத்தாலாகிய நானென்பதானது நிற்கமாட்டாது என்பதாம். முதலடியிலுள்ள ஆம் என்னும் வினைமுற்ருனது, சிறிதென்பதுடனும் கொண்டு கூட்டப்பட்டது. மூன்ருமடியிலுள்ள ஆம் என்பது பெயரெச்சம். தத்துவமசி மகாவாக்கியார்த்தத்தை "பண்டைமறை களுமதுநா ஞனேனென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே" என்னுஞ் சிவஞான சித்தித் திருவிருத்த வுரையிற் காண்க. சத்துமயன் என்பது சன்மயன் என்ருனது, வடநூன்முடிவு; சத்து-நித்தியப்பொருளாயுள்ள சிவம்; சிவம் சத்தெனப்படுதலை "சத்துள போதே வேருஞ் சதசத்துமசத்து மெல்லாம்-வைத்திடு மநாதியாக வாரிநீர் லவணம் போலும்" என்ற சிவஞானசித்தித் திருவிருத்தத்தா லறிக. சுவதந்திர னென்னும் வடமொழி சுதந்திரனெனவும் வருமென்பதை "அந்தமில் சுதந்திரத்தோ ஞர்சொல வனத்தி லன்று-வந்தரு ணடம்பு ரிந்தான்" எனக் கோயிற் புராணத்திலும் "பல்சித்தி முத்தி பாலு லடைதலாற் ருெல்சீவ ரும்முள ருந்தீபற-சுதந்திர னீனரென் றுந்தீபற" என அவிரோத வுந்தியாரிலும் வருமாற்ருலறிக. மெச்சுதல்-கொண்டாடுதல்; இதனை "மெச்ச மெச்சுமுல கத்தரக்கர்களில் விக்கிரமத் திறலின் மிக்கநீ" எனப் பாரதம் வேத்திரகீயச் சருக்கத்திற் கூறுமாற்ருலறிக. சிவோகம்-சிவம் நானெனப் பாவித்தல்; இதனை "அறிவரியான் றனையறிய வாக்கையாக்கி****சிவோகம்பாவிக்குமத்தாற் சிவனுமாவர்" எனவருஞ் சிவஞான சித்தித் திருவிருத்த வுரையிற் காண்க. அகம் என்னும் பெயர் சீவனுக்கு உண்டென்பதை "தேறினக மெனுஞ்சத்தம்-எம்மலமு மிலீர் சீவர்க் கிடுகுறிவாசகமதனுல்" எனச் சூதசங்கிதை ஆன்மமந்திர முரைத்த வத்தியாயத்திற் கூறப்படுமாற்ருலறிக. நான் என்னும் தன்மைச் சொல்லானது, ஈண்டுப்பிறிதுபடவொதுக்கிப்படர்க்கை யிடமாகவைத்துக் கூறப்பட்டது; அது, விவகரிக்கும்போது படர்க்கை முன்னிலை யென்னும் ஈரிடத்திலும் வருமென்பதை

போதத்திற் கில்லை திடம்போ யதுமனம் போனபடி
தீதி லதனல் விளை துன் புருசித்துண் சீவனுக்காம்
ஏதுரைத் தானுங்கேளார்போன் றனைநடத்தென்னைநன்குய்த்
தாதா வாகி யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. சுக.

இன்பத்தை நல்வினை துன்பத்தைத் தீவினை யீந்திடும்பின்
என்பத்தைக்கேட்டிருந் துந்தீவினையேழையேனிழைத்தேன்
உன்பற் றொழிய வொருபற்று மில்லை யுடையவனே
அன்பற்ற பேதை யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

"நான் கெட்டவா பாடித் தெள்ளேணங் கொட்டாமோ" எனத் திருவாசகத்திலும் "நானற்ற போதத்தே நானுன முத்தியை நானெங்ஙனஞ் சொல்வ துந்தீ பற-நான்மறைக் கெட்டாதென் றுந்தீ பற" என அவிரோத வுந்தியாரிலும் "யாமோதிய கல்வியு மெம்மறிவுந்-தாமே பெற வேலவர் தந்ததனுற்-பூமேன்மயல் போயற மெய்ப்புணர்வீர்-நாமே நடவீர் நடவீரினியே" எனக் கந்தரநுபூதியிலும் கூறப்பட்டதனுலறிக; தாயுமானசுவாமிபாடல் பாயப்புலி 14-ல் "நானென் றொருமுத லுண்டென்ற நான்றலை காணவென்றுட்-டானென் றொருமுதல் பூரணமாகத் தலைப் பட்டு" எனவும், ஆசையெனும் 32-ல் "மோனகுரு வாகியுங்கை காட்டினையே திரும்பவுநான் முளைத்துத் தோன்றி மானதமார்க் கம்புரிந்திங் கலங்கேனே" எனவும், ஆனந்தமானபரம் - 7-ல் "நானுமி நின்றவனு நீயாகி நின்றிடவு நானென்ப தற்றிடாதே" எனவும் கூறப்பட்டவைகளும் ஈண்டுச் சிந்திக்கப் பாலனவாம்.

சுக. போதம்-அறிவு. உருசித்து உண்ணுதல்-சுவைபார்த்துப் புசித்தல். நன்கு உய்த்து-நல்லவழியிற் செலுத்தி. ஆதாவு-ஆதாரம்; உதவி எனினுமாம்.

சுஉ. என்பதை என்பது, என்பத்தை என விகாரப்பட்டு வந்தது; "எத்தினுற் பத்திசெய்வே னென்னைநீ யிகழவேண்டாம்"

நிஞதர வல்லாற் றுணேவே றெனக்கின்மை நீயறிவாய்
மநாதி கரணத் திரயநன் கிற்செல வாழ்விப்பதுங்
கஞவினுந் தீங்குரு மற்காப் பதுநின் கடன்மையன்ரே
அநாதர்ப் புரப்போ யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே ௬௩

நீநிய மித்த விதியா நெறியினில் லாதறிவு
சூனிய மாய்மனப் போக்கிற்போய்ப் பாவத் தொடக்குண்டனன்
யானிய மன்வரி னென்சொல்லு வேன்வீணி லேகினவே
ஆனிய மெல்லா மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. ௬௪

---

எனத் தேவாரத்திலும் "புத்தி யுறுத்தானவன் கருமப் பொலிவை யறிந்தே விநாயகரும்-அத்தை யுறுத்தார்" என விநாயக புராணம் வல்லபை கணேசர் திருவவதாரப்படலத்திலும் "நத்துப் புரை முடியீர் நல்லுணர்வு சற்றுமிலீர்-எத்துக்கு மூத்தீர்" எனக் கந்தபுராணம் வள்ளியம்மை திருமணப்படலத்திலும் "சாந்தபதப் பரம்பொருளே பற்றுபொரு ளிருக்குமத்தாற் சலிக்குஞ் சித்தம்" எனத் தாயுமானசுவாமி பாடல் ஆசையெனும் - 21-லும் "பொன் ஞக வின்னும் புகல்கின்ரேங் கேளித்தை" எனத் திருவெற்றி யூர்ப் புராணத்திலும் அதை, இதை என்பவைகள் அத்தை, இத்தை என வந்தாற்போல.

௬௩. நின்ஞதரவு என வாற்பாலது, ஒற்றிரட்டாமல் நிஞதர வெனவந்தது எதுகை நோக்கி. மநாதிகாணத் திரயம்-மனம் வாக்குக் காயமென்னும் முக்கரணம். கஞ-சொப்பனம். அநாதர்ப் புரப்போன்-அநாதரக்ஷகன்.

௬௪. நியமித்தல்-ஏற்படுத்தல். விதிஆம் நெறி-செய்யலாமென விதித்த சன்மார்க்கம். அறிவு சூனியம் ஆய் - அறிவுகெட்டு. தொடக்குண்ணுதல் - கட்டுப்படுதல்; இதனே "படுபழியஞ்சான் செய்த பாதகத் தொடக்குண்டு" எனத் திருவிளையாடற் புராணம் பழியஞ்சினபடலத்திற் கூறுமாற்ருலறிக. ஆனியம்-நாள்.

மிகவாக் கிரமித் தெனைத்தீங் குறுத்துமென் வெள்ளறிவு
சுகவாக் கமிழந்திட் டுந்தீங்கோர்ந் தின்றுதான் றுக்கித்தது
புகவாக் கினியுன் னுருத்தியா னந்துதி பூசையிலென்
அகவாக் குடலையடியேன் றுயர்கெடுத் தாண்ருடளே. ௬௫

இரக்க முடைமை நினது சொரூப விலக்கணமென்
றுரைக்குறு லற்றுற் பிழைபொறுத் தோம்ப லுனக்குத்தகும்
புரக்கிற்றகாதென் றுன்பாற்சொலார்தக்காரென்புன்மையெண்ணி
அரைக்கணந் தாழ்க்கா தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே

---

௬௫. மிகவும் வரம்புகடந்து என்னைப் பாவத்திற்புகுத்திய எனது அலபுத்தியானது, சுகமாகிய செல்வத்தை யிழந்தீட்டிய பாபத்துன்பத்தை யுய்த்துணர்ந்து இன்றைக்குத்தான் வருந்தியது (ஆதலால்) இனிமேல் உனது திருவுருத்தியானத்திலும் தோத்திரத்திலும் பூஜாகிரியையிலும் எனது மனவாக்குக் காயங்களைப் புகும்படி ஆக்கியருளுவாயாக, என்க. ஆக்கிரமித்தல்-வரம்பு கடத்தல். வெள்ளறிவு-அலபுத்தி; இதனை "மேயவத் தலத்தி னோர்க்கென் வெள்ளறி வுரையிற் குற்றம்-ஆயுமா றரிதன் றேனும்" எனத் திருவிளையாடற் புராணத்திற் கூறப்பட்டிருத்தலாலறிக. புக ஆக்கு-புகும்படிசெய். அகம் வாக்கு உடல்-மன வாக்குக் காயங்கள்.

௬௬. இரக்கம்-மனவுருக்கமாகிய அருள்; அது கடவுளுக்குச் சொருப லக்ஷணமென்பதை "உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றும்-கருமமு மருளா ரன்றன் கரசரணாதி சாங்கந்-தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு டனக்கொன் றின்றி-யருளுரு வுயிருக் கென்றே யாக்கின னசிந்த னன்றே" என்னுஞ் சிவஞான சித்தித் திருவிருத்தத்தாலுணர்க. புரக்கில்-நீ என்னை இரக்ஷிப்பையாகில். புன்மை-நீசத்துவம். தாயுமானசுவாமிபாடல் எனக்கெனச்செயல்-8-ல் "குணமிலாதபொய் வஞ்சனுக் கெந்தை

சேரர் பிரான்சுந் தரரொடுந் தானுந் திருக்கயிலைக்
கூர விரைந்தாற்றுன் பூசையை மெல்ல வுஞற்றென்றவர்
சேருமு னௌவையைச் சுண்டத் தெடுத்தச் சிகரிமுகப்
பாரவைத் தாய்நீ யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே.

---

நிர்க் குணமாம்-மணமு லாமலர்ப் பதந்தரின் யாருனை மறுப்பார்" என்ற திருவாக்கைப் பின்பற்றி, ஈண்டுப் புரக்கிற் றகாதென்றுன் பாற்சொலார் தக்கார் எனக் கூறியதென் றுணர்க.

கூஎ. சேரர்பிரான் சுந்தரரொடும் தானும் திருக் கயிலைக்கு ஊர-சேரமான்பெருமாணயனர் சுந்தரமூர்த்திநாயனு ரென்னு மிருவர்களோடுங்கூடத் தானுஞ்சேர்ந்து திருக்கயிலாய மலைக்குச் செல்லும்பொருட்டு. விரைந்து ஆற்று உன் பூசையை மெல்ல உஞற்று என்று-ஔவைப்பிராட்டியார் விரையிற் செய்த ஆராதனையை மெதுவாகச் செய்யென்று சொல்லியருளி. அவர் சேரு முன் - மேற்கூறிய சேரர்பிரானும் சுந்தரருமாகிய அவ்விருவர் களும் போய்ச் சேருதற்கு முன்னமே. ஔவையை-ஔவைப் பிராட்டியாரை. சுண்டத்து எடுத்து அச்சிகரி முகப்பு ஆரவைத்தாய்-துதிக்கையினுற் றூக்கி அக்கயிலாய மலையினது முன்வாய்தலிற் பொருந்தும்படி வைத்தருளினுய் என்க. ஔவைப் பிர்ாட்டி அவ்விருவர்க்கு முன்னமே விநாயகப் பெருமானது திருவருளாற் போயிருந்தமையை, சேரர்பிரானை முன்னிலைப் படுத்தி அப்பிராட்டி கூறிய "மதுரமொழி நல் லு மை யா ள் புதல்வன் மலர்ப்பதத்தை, முதிர நினையவல் லார்க்கரி தோமுகில் போன் முழங்கி, யதிர நடந்திடும் யானையுந் தேரு மதன்பின் வருங், குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே" என்னுந் தனிப்பாடற் றிரட்டுக் கலித்துறையாலறிக.

இந்திய மந்தக் கரணங் கலங்க வெருமையின்மேல்
வந்திய மன்செய் கலகத் துனையான் மறக்கினுநீ
தந்திய மன்ற கருணை முகத்தொடு சார்ந்தஞ்சலென்
றந்திய காலத் தடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. சுஅ

சகத்திர நாமத்துள் ஒன்று.

மாபாசங் கொண்டெனைப் பற்ற மறலி வரிற்சருவ
சோபாச மங்கித னென்று யிரத்தொர்பேர் சொல்லப்பெறும்
நீபாச மங்குசத் தோடாகு வில்வந்து நின்றுதடுத்
தாபாச நீக்கி யடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. சுகூ.

---

சுஅ. இந்தியம் - மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பஞ்சேந்திரியங்கள்; இந்திரியமென்னுஞ்சொல் இந்தியமென வந்தது; இதனை "துயிலை யின்பெனச் சொல்லுத விந்தியத்-தியலு நெஞ்ச மிலாமையி னுலன்றோ" எனப் பிரபுலிங்கலீலையிற் கூறு மாற்றாலறிக. அந்தக்கரணம்-மனம் புத்தி சித்தம் அகங்கார மென்னும் நான்கு உட்கரணங்கள். எருமை - எருமைக்கடா. அமன்ற கருணைத் தந்தி முகத்தொடு சார்ந்து அஞ்சல் என்று ஆண்டருள் - நிறைந்த அருளோடுங்கூடிய யானைமுகத்தோடு வந்து பயப்படாதே என்று கூறி ஆட்கொண்டருள்வாயாக என்க. அமலல்-நிறைதல்; இதனை "அடுத்து நம்வயி னிதோகண நாதரா யமன்றனர் காணென்று - மடுத்த காதலின் மொழிந்துமற் றெத் திறப் பயன்களும் வகுத்திட்டார்" எனக் காஞ்சிப்புராணம் இரு பத்தெண்டளிப்படலத்தில் வருமாற்றாலறிக. அந்தியகாலம்-மரணகாலம். கலகம்-ஒன்றல்லாப் பேரொலி; இதனை, சூடாமணி நிகண்டு பத்தாந்தொகுதி-50-லும் "சாகா தெனையே சரணங் களிலே-காகா நமனூர் கலகஞ் செயுநாள்" எனக் கந்தரனுபூதியி லும் வருமாற்றாலறிக.

சுகூ. பாசம்-வாழ்நாள் முடிவிற் சேவர்களை உடலினின்றகற்றி யிழுக்கும்பொருட்டியமன் சுழற்றுங் கயிறு; இதனை "சூலம்பிடித்

பூமி வசமாஞ் சுவர்க்கம் வசமாம்வெண் பூவியவள்
மாமி தாக்கல்வி செல்வம் பெருகுமா தங்கமுகச்
சாமி யுனைத்திருச் சிற்றம் பலத்துற்றுச் சார்ந்தவர்க்கே
ஆமின் பனைத்து மடியேன் றுயர்கெடுத் தாண்டருளே. எ௦

---

தெமபாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்-காலன் றனக்கொரு காலுமஞ்சேன்" எனக் கந்தரலங்காரத்திற் கூறுதலாலறிக. மறலி-இயமன். "சர்வசோபா சமந்விதன்" என்பது விநாயக சகத்திர நாமத்து ளொன்று; சமஸ்த காந்தியோடுங் கூடினவன் என்பது, இந்த நாமத்திற்கு அர்த்தமென மேலோர் கூறுவர்; இருண்மயத் தியமனை யோட்டுதல் ஒளிமயக் கடவுட்கேயியலுமாதலால் இந்த நாமத்தை யமைத்து வேண்டப்பட்டது. பாசம்-கயிறு; அங்குசம்-தோட்டியென்னும் ஆயுதம்; இவ்விரண்டும், சிஷ்டபரிபாலந ஹேதுக்களுள் ஒன்றாகிய துஷ்டநிக்ரஹத்தின்பொருட்டு ஸ்ரீ விநாயகப்பெருமான் திருக்காத்திற் றாங்கப்பெற்றன; தாங்கப் பெற்றமையை "அஞ்சுகாமு மங்குச பாசமும்-நெஞ்சிற் குடி கொண்ட நீலமேனியும்" என விநாயக ரகவலிலும் "அங்குச பாசமேந்தி யம்பிகைதனயன் முன்னோன்" எனச் சூடாமணி நிகண்டிலும் கூறப்படுதலாலறிக. ஆகு - பெருச்சாளி.

எ௦. பூமி வசம் ஆம் சுவர்க்கம் வசம் ஆம் என்பதற்கு, மண்ணுலகுஞ் சுவாதீனமாகும் விண்ணுலகுஞ் சுவாதீனமாகும் எனப் பொருள் கொள்ளப்படும்; படவே, விநாயகரைச் சார்ந்தவர், நரபதியுமாவர் சுரபதியுமாவரென்பதாம்; இனி, இதற்கே, பூமியிலுள்ளாரும் சுவர்க்கத்திலுள்ளாரும் வசமாவர் எனப் பொருள் கோடலும் ஒன்று; இவ்வாறு கொள்ளுங்கால், விநாயகரைச் சார்ந்தவர் அட்டமாசித்திக்குண் மேலாயுள்ள வசித்துவமுடையோராவரென்பதாம். வெண்பூவி அவள் மாமி - வெண்டாமரைப் பூவணையையுடைய சாசுவதியும் அவளுடைய மாமியாராகிய இலக்குமியும். மாதங்க முகச் சாமி-யானை முகக் கடவுள். இன்பு

அனைத்தும் ஆம்-பலவகைப் போகசுகமும் மோக்ஷசுகமுமாகிய எல்லாமுமே உண்டாகும் என்க.



ஸ்ரீ குருசிவபாதந் துணை.

திருச்சிற்றம்பலம்.

# தில்லைக் கற்பக விநாயகர் தோத்திரம் எழுபது முற்றிற்று.



## வாழ்த்து.

* வேதஞ்சி வாகமம் வைதிகஞ் சைவம் வியாக்ரபுரப்
போதக மாமுகன் புத்திசித் தித்தாயர் பூதியக்கம்
மேதமை வன்னஞ் சுரர்பூ சுரர்பசு வேந்துலகின்
மாதமும் மாரி புயல்பெய நீடூழி வாழியவே.

---

* வியாக்ரபுரம்-சிதம்பர க்ஷேத்திரம். போதகம்-யானை. பூதி-விபூதி. அக்கம்-உருத்திராக்கம். மேதம்-யாகம். ஐவன்னம்-பஞ்சாக்ஷரம்; வர்ணம் என்னும் வடமொழி வன்னம் என வந்தது; இதனை "வழுவிலா வழியாறு மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்க டத்துவங்கள் கலைகள்" எனச் சிவஞானசித்தி எட்டாஞ் சூத்திரத் தாருந்திருவிருத்தத்திலும் "தேசுறும் வன்ன ரூபியாய் நிறைந்த தேவியை முறைவழா தமைத்து" எனக் காஞ்சிப்புராணச் சனற்குமாரப்படலம்-18-லும் கூறுமாற்றா லறிக.

ஸ்ரீ சிவகாமி நாதாய மங்களம்.